*Muracoli*

*Muracu 3, oli 49*

*March 29, 1957*

Record no. 945

# முரசொலி

வார இதழ்

ஆசிரியர் மு. கருணாநிதி

முரசு 3 || 29—3—57 வெள்ளி ஒலி 4?


## காலை வாரிவிட்டார், காமராசர் !



பெரியார்மீது கோர்ட்டை அவமதித்த குற்றத்தைச் சுமத்தி கூண்டிலேற்ற சென்னை அரசாங்கம் உயர்நீதி மன்றத்தில் வழக்கு தொடுத்திருக்கிறது.

# விகடனாரே; விகடனாரே!

மூச்சை நிறுத்திவிடு; உனக்கு மகுடம் புனைவிக்கிறேன்—என்று நிபந்தனை விதிப்பதிலே எவ்வளவு விவேகம் இருக்க முடியுமோ;

நாக்கை வெட்டி எறி; உன்னை நானிலம் புகழும் பேச்சாளனாக்குகிறேன்—என்று புகல்வதிலே எவ்வளவு புத்திசாலித்தனம் ஒட்டிக்கொண்டிருக்க முடியுமோ;

மூக்கை அறுத்துவிடு; உனக்கு மனோரஞ்சித மலரைப் பரிசளிக்கிறேன்—என்று ஆசை காட்டுவதிலே எவ்வளவு விசால ஞானம் புதைந்திருக்க முடியுமோ;

எவ்வளவு விவேகமும் விசித்திரமும் இருக்க முடியுமோ அவ்வளவுதான் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பார்த்து நீங்கள் திராவிட நாட்டுப் பிரிவினையை விட்டு விடுங்கள்; உங்களைப் பலமான எதிர்க்கட்சி யாக்குகிறோம் என்று கூறுவதிலும், எழுதுவதிலும் இருக்க இயலும்!

நாட்டுப் பிரிவினை நமது உயிர்க் கொள்கை! எதிரிகள் கோடி கோடியாய் நமது காலில் கொட்டிக் குவித்தாலும் மாற்றவியலாத மாபெரும் பிரச்னை!

அதைத்தான் விட்டுக்கொடுத்துவிட்டு, இதர கட்சிகளுடன் கூட்டுசேர்ந்து எதிர்க்கட்சி அமைக்கப் பாடுபட வேண்டும் என்று தலையங்கம் வாயிலாக கோரிக்கை விடுத்திருக்கிறது, 'ஆனந்த விகடன்'!

அதோடு வகுப்புவாதம் என்னும் ஒரு பொருளையும் அகற்றிவிட வேண்டுமென்று எழுதுகிறது 'விகடன்'!

—இதைபற்றி நாம் மீண்டும் விளக்கவேண்டிய அவசியமில்லை. "தனிப்பட்ட பார்ப்பனர்களை நாங்கள் என்றுமே வெறுத்ததில்லை. பார்ப்பனர்களை இந்த நாட்டைவிட்டு வெளியேற வேண்டும் என்றும் கேட்டதில்லை"-என்று அண்ணா அவர்களது சென்னைச் சொற்பொழிவினை மேற்கோள் காட்டி 'கல்கி'யே தி. மு. கழகம் பார்ப்பன எதிர்ப்புக் கழகமல்ல-என்பதை ஒப்புக்கொண்டிருக்கிறது!

ஆனால் எதிர்க் கட்சியின் அவசியத்தை 'ஆனந்த விகடன்' வற்புறுத்தியதற்காக அதைப் பாராட்டுகிறோம்! மிக மிகப் பாராட்டுகிறோம்!

நாட்டுப் பிரிவினை குறித்து மேலும் அது எழுதுகிறது:

"உலகமே ஒரு சர்க்காராக ஆக வேண்டும் என்று கருதும் இந்நாளில், வடநாடு, தென்னாடு என்று பிரிந்துபோக உரிமை கேட்கிறார்கள். அணுகுண்டும், அமெரிக்க உதவியும், ரஷ்யப் போட்டியும் உலக நாடுகளை சொக்கட்டான் காயாக வைத்துச் சூதாடிக்கொண்டு வரும் யுத்த அபாயம் மிகுந்த இந்நாளில், இவர்கள் தமிழ்நாடு தனித்திருக்க வேண்டும் என்று எண்ணத் துணிகிறார்கள்!"

உலகமே ஒரு சர்க்காராக வேண்டும் என்று கருதும் இந்நாளில் பிரிந்துபோகும் உரிமையைக் கேட்கிறோமாம், நாம்!—எழுதுகிறது விகடன்!

உலகமே ஒரு சர்க்காராக வேண்டும் என்று கருதும் இந்நாளில்தான் இந்தியா சுதந்திரம் பெற்றது! பாகிஸ்தான் பிரிந்து சென்றது!

உலகமே ஒரு அரசாங்கமாக வேண்டும் என்பதற்காக இந்தோனேஷியா தனது விடுதலைப் போராட்டத்தை ஒத்திவைக்கவில்லை!

அகில உலக அரசாங்கம் அமைய இருக்கும்போது நாம் ஏன் சுதந்திரம் கேட்க வேண்டும் என்று சும்மாயிருக்கவில்லை ஆப்பிரிக்காவிலுள்ள கோல்ட்கோஸ்ட் நாடு! உலகமே ஒருசர்க்காராக வேண்டும் என்று கருதும் இந்நாளில் தான் அது 'கனா' என்ற பெயருடன் உரிமைக் கொடியை உயர்த்திப் பிடித்துக்கொண்டிருக்கிறது!

'அணுகுண்டும், ஹைட்ரஜன் குண்டும், அமெரிக்க உதவியும், ரஷ்யப் போட்டியும் உலக நாடுகளை சொக்கட்டான் காயாக வைத்து சூதாடிக்கொண்டு வரும் யுத்த அபாயம் மிகுந்த இந்நாளில்தான்' அல்ஜீரியாவிலே, மொராக்கோவிலே உரிமை முழக்கம் கேட்கிறது!

அன்புள்ள விகடனாரே! எந்தக் காலத்தில் எந்தக் காரணத்திற்காக நாட்டுப் பிரிவினை ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது என்று கருதுகிறீர்கள்?

சிரங்கள் அறுந்து விழுந்தாலும்; சித்ரவதை நடந்தாலும் தாய்நாட்டு விடுதலை வேண்டாமென்று கூறிடும் உண்மை மனிதன் இந்த உலகில் எங்கிருக்கிறான்?

அன்னை நாட்டுக்காக அறுத்துக் கொடுக்க என்னிடம் ஒரே ஒரு தலைதானே இருக்கிறது—என்று ஏங்கிடும் விடுதலை வீரர்களையும், தாயகத்திற்குத் தருவதற்கு என் உடம்பில் ஒரே ஒரு உயிர்தானே ஒட்டிக்கொண்டிருக்கிறது—என்று கவலைப்பட்டிடும் தாய்த்திரு நாட்டின் பாதுகாவலர்களையும்தானே பார்க்க முடிகிறது உலகச் சரித்திரத்தின் விடுதலை அத்தியாயத்திலே!

அன்புள்ள விகடனாரே! உலக ஒற்றுமைக்கும் நாட்டுப் பிரிவினைக்கும் எள்ளளவும் சம்பந்தமில்லை!

உலக சமாதானம் தென்னாடு தனியே பிரிந்துவிடுவதால் ஒன்றும் கெட்டுவிடாது!

அதனால்தான் மீண்டும் மீண்டும் தெளிவுபடுத்த ஆசைப்படுகிறோம்—

ஆலமரத்தைப் பார்த்து உன் ஆணிவேரை அறுத்துக்கொடு என்பதிலே எவ்வளவு கருத்தாழம் இருக்க முடியுமோ;

மேகத்தைத் தழுவும் மலையைப் பார்த்து, 'நீ சற்று குனிந்துகொடு!' என்று கூறுவதிலே எத்தனை நல்லறிவு இருக்க முடியுமோ—

அவ்வளவு கருத்தாழமும் நல்லறிவும்தான் இருக்க முடியும் தி. மு. கழகத்தைப் பார்த்து நீங்கள் நாட்டுப் பிரிவினையை விட்டுக்கொடுங்கள்—என்று கூறுவதிலும்! ★

## தரைமட்டமானோரின் தடுமாற்றம்!

"...அண்மையில் உள்ள மாநிலமான கேரளத்தோடு ஒப்பிடும்போது, தமிழ் நாட்டில் தங்களுக்கேற்பட்ட சீர்குலைவு கண்டு கம்யூனிஸ்டுக் கட்சியினர் நிலைகுலைந்து போயுள்ளனர்.

55 இடங்களுக்கு அபேட்சகர்களை நிறுத்தி வைத்த போது அவர்கள் தங்களின் இப்போதைய பலத்தை உறுதி செய்து கொண்டு மேலும் சில இடங்களுக்கு ஆசைப்பட்டுக் கிடந்தனர்.

சென்னையிலும் தனது கட்சி பிரமாத வெற்றிகளைப் பெறும் என்று அஜாய் கோஷ் இங்கு கூறியிருந்தார். அந்த அளவு அவர்கள் நம்பிக் கிடந்தனர். சுமார் 25 இடங்களேனும் கிடைக்கும் என்று எதிர்பார்த்தனர்.

தங்களின் வெற்றிக்கான வாய்ப்புகள் பற்றி கணக்கிட்டபோது, தி. மு. கழகத்தின் பலத்தைக் குறைத்தும், காங்கிரஸ் சீர்திருத்தக் கட்சியின் பலத்தை அதிகமாகவும் மதிப்பிட்டுவிட்டதாக கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் ஒருவர் கூறினார்...

என்றாலும் கட்சிப் பத்திரிகையான 'ஜனசக்தி' கம்யூனிஸ்டுக் கட்சி, தேச விரோத சக்திகளை முறியடிப்பதிலும், 'வடநாட்டுச் சுரண்டலிலிருந்து சுதந்திரம் வேண்டும்,' என்ற கோஷத்துடன் தேர்தலில் ஈடுபட்ட தி. மு. கழகத்திடமிருந்து கிடைத்திருக்கக்கூடிய பலமான 'அடி'யிலிருந்து காங்கிரசைக் காப்பாற்றுவதிலும் கணிசமான வெற்றி கண்டிருப்பதாகக் கூறியுள்ளது.

என்றாலும், தமிழ் மக்களிடை—குறிப்பாக இளைஞரிடை தி. மு. கழகம் தான் வேறெந்தக் கட்சியையும்விடத் தமிழர் நலன் பேணுவதில் சிறந்தக் கட்சி என்ற எண்ணத்தை உருவாக்குவதில் வெற்றி கண்டிருக்கிறது என்று கம்யூனிஸ்ட்டு வட்டாரம் கருத்தறிவித்துள்ளது.

தி. மு. கழகத்திற்கு ஏற்பட்டுள்ள இந்தச் செல்வாக்கு தீங்கு பயப்பது என்றும் இந்த வட்டாரம் கூறுகிறது. தங்களின் தேர்தல் இயக்கமே, காங்கிரசைத் தோற்கடிப்பதைவிட இந்த சக்தியை ஒழிப்பதில்தான் திருப்பப்பட்டிருந்தது என்றும் கம்யூனிஸ்டு வட்டாரம் கூறுகிறது."

—'இந்தியன் எக்ஸ்பிரஸ்'
சென்னை: 21—3—57



# தலையங்கம்

உதித்துவிட்டான் செங்கதிரோன் தென்திசையில்
கொதித்தெழுவோம், கொத்தடிமை தீர்வதற்கே!

வெள்ளி 29—3—57 சென்னை

## தந்தைக்கு நேர்ந்த கதி!

மார்ச் 11-கடைசித் தேர்தல் தினம் முடியட்டும்; காமராசர் தனது சுய ரூபத்தைக் காட்டத்தான் போகிறார்; அதைக்கண்டு பெரியார் திகைக்கத்தான் போகிறார்.

—என்று பல முறை பேசியும், எழுதியும் திராவிடர் கழக நண்பர்களை எச்சரித்து வந்திருக்கிறது நாடு நலம் பெற கேடு களைந்திட எண்ணும் தி. மு. கழகம்.

நாம் குறிப்பிட்டபடியே தேர்தல் முடிவுகள் வெளியான உடனேயே பெரியாரைக் கூண்டிலேற்ற; அவர்மீது மாபெரும் குற்றச்சாட்டை வீசி யிருக்கிறது, காமராசரைத் தலைவராகக் கொண்ட சென்னை அரசாங்கம்!

வழக்கிற்குக் காரணமான நிகழ்ச்சி மிகச் சாதாரணமானதுதான்.

திருச்சி கலெக்டர் திரு மலையப்பன் அவர்கள்மீது சென்னை நீதிபதிகள் இருவர் குற்றம்சாட்டி; அவர் கலெக்டர் பதவி வகிப்பதற்கே தகுதியற்றவர் என்றும் தங்கள் தீர்ப்பில் கூறி யிருந்தனர்.

இதைக் கண்டிக்கும் முகத்தான் 4—11—56 அன்று திருச்சியிலே பொதுக்கூட்டம் நடத்தி உயர்நீதிமன்றத் தீர்ப்பைக் கண்டித்திருக்கின்றனர்.

இந்தச் செய்தியை வெளியிட்டு, தலையங்கமும் தீட்டியிருந்தது காங்கிரஸ் பிரச்சாரத்திற்காகக் கை மாறியிருக்கும் 'விடுதலை' ஏடு.

—இந்தக் காரணத்திற்காகத்தான் பெரியார்மீதும் மணியம்மைமீதும் உயர்நீதி மன்றத்தை அவமதித்த வழக்கினை அட்வகேட் ஜெனரல் தொடர்ந்திருக்கிறார்.

பெரியார் தன்னோடு கொண்டிருந்த தொடர்பினையும், அவருக்களித்த ஆதரவினையும் மறந்துவிட்டு, நன்றி கொன்ற பண்பினராய் காமராசர் இப்போது பெரியாரையே குற்றவாளிக் கூண்டில் ஏற்றுகிற அளவுக்கு செயலாற்ற முனைந்திருப்பது உண்மையிலேயே வருந்த வேண்டிய செய்தியாகும்.

எதிரி ஒருவர்மீது பூட்டவேண்டிய கணையை அருமருந்தன்ன நண்பர்மீதே பூட்ட முனைந்துவிட்டார் பச்சைத் தமிழர்!

பெரியார் அவர்கள் பழைய திராவிடர் கழகத்தின் தலைவராயிருந்தால் இந்த வழக்கினைப் பார்த்துத் தமிழகம் ஆச்சரியப்பட்டிருக்காது. ஏனெனில் பழைய திராவிடர் கழகம் மாவீரர்கள் உலவிய பாசறையாக இருந்தது; எதிரிகள் கோடி இட்டு அழைத்தாலும் தோடேன்—என்று சூளுரைத்துச் செயலாற்றும் சிங்க நெஞ்சினர் உலவும் கூடமாக இருந்தது; ஆளும் கட்சிக்கு வால் பிடிப்பவர்களை வால் முளைத்த அனுமானைவிடக் கேவலமாகக் கருதிடும் குணக்குன்றுகள் நடமாடும் போர் முகாமாக இருந்தது.

இன்றோ அந்த நிலை கனவாய்—பழங் கதையாய்—கானல் நீராய்ப் போய்விட்டது.

பெரியார் நிபந்தனை ஏதுமின்றி ஆதரவு தந்தார் காங்கிரசிற்கு!

**"வருகிற பொதுத் தேர்தலில் காமராஜர் வெற்றிபெற்றுவிட்டால் அரசியலில் நமக்குத் தொந்திரவே இருக்காது. மறுபடியும் காமராஜர் ஆட்சிக்கு வரப்போகிறார். அப்போது பாருங்களேன், காமராஜரை எப்படி ஆட்டி வைக்கிறேன் என்று!"**

—சென்ற அக்டோபர் மாதம் பெரியார் அவர்கள் நாகப்பட்டினத்தில் ஆற்றிய சொற்பொழிவின் ஒரு பகுதி இது!

**"காமராஜர் பதவிக்கு வந்ததும் எங்களுடைய ஆதரவை விரும்பினார். எங்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்தால் உங்களுக்கு ஆதரவு கொடுக்கிறோம் என்றோம். 'உங்களுக்கு உதவி செய்வது என் கடமை. அதை நானே செய்வேன்' என்று காமராஜர் கூறினார்!"**

—இது செட்டிக்குளம் என்ற ஊரில் பெரியார் அவர்கள் 22—2—57 அன்று பேசியது.

காமராசர் வெற்றி பெற்றால் அரசியலில் தொந்திரவே இருக்காது!

காமராசரை நான் ஆட்டிவைப்பேன்!

'உங்களுக்கு (தி. க.வுக்கு) உதவி செய்வது என் கடமை' என்று காமராசரே உறுதி அளித்திருக்கிறார்!

—இவை யெல்லாம் சமீபகால பெரியார் பொன்மொழிகள்!

தொந்திரவே இருக்காது என்றார்; இப்போதோ தொந்திரவளிக்கத் தயங்கவில்லை, காமராசர்!

ஆட்டிவைப்பேன் என்றார்; ஆனால் காமராசரோ மாபெரும் தலைவரை ஆடும் பதுமை யென நினைத்து குற்றவாளிக் கூண்டிலே கொண்டுவந்து நிறுத்துவதற்கும் துணிந்துவிட்டார்.

உங்களுக்கு உதவி செய்வது என் கடமை—என்று கூறிய காமராசர்தான் பதவி நிலையானதும் பாராங்கல்லை உருட்டி விட்டிருக்கிறார்!

—இப்படித்தான் சென்ற பொதுத் தேர்தலில் கம்யூனிஸ்ட்டுகளைக் கண்ணை மூடிக் கொண்டு ஆதரித்தார், பெரியார்!

தோழர் ஜீவானந்தம்கூட அந்த நேரம் பெரியாரைத் 'தமிழ்நாட்டு காரல் மார்க்ஸ்' என்று வர்ணித்தார்.

பின்பு அதே ஜீவானந்தம் தேர்தல் முடிந்ததும், 'சீ; சீ; இவரா பெரியார்?' என்கிற தோரணையிலே கேள்வி எழுப்பினார்.

—இப்படி யெல்லாம் இரு நாக்குடன் விளங்கும் கம்யூனிஸ்ட்டுகளைவிட கீழ்த்தரமாகப் போய் விட்டார் பெரியாரைப் பொறுத்தவரையில் காமராசர்!

தந்தை பெரியாரைத் தள்ளாத வயதில் உயர்நீதி மன்றப் படிக்கட்டுகளிலே ஏற வைத்து, குற்றவாளிக் கூண்டிலே நிறுத்துவது என்பது எதிரியும் அவருக்குத் தர விரும்பாத தண்டனை! கொடிய நெஞ்சம் கொண்டவனும் பார்க்க விரும்பாத காட்சி!

—ஆனால் விருதுநகரத்துப் பச்சைத் தமிழரோ பெரியாரைக் கூண்டிலேற்றும் படலத்துக்கு நாடறிய 'துவஜாரோகணம்' நடத்தியிருக்கிறார்!

—இந்த நிகழ்ச்சிக்கு பல விளக்கங்கள் தந்து நாளை மாற்றுக்கட்சி ஏடுகள் எழுதத்தான் போகின்றன!

"நாயக்கர் ஏமாந்தார்!" என்றுதான் அவை தலைப்பு தந்து கேலி புரியுமே தவிர; "நாடார் நன்றி மறந்தார்!" என்று எழுதமாட்டா அந்த ஏடுகள்!

இருந்தாலும் இவைகளை யெல்லாம் மெழுகிட்டு மறைக்க; "இந்த நாடகத்துக்கெல்லாம் மூலகாரணம் சுப்ரமணியம்தான்; அவர் செய்த சூழ்ச்சிதான்!" என்று 'விடுதலை' மாற்றுருவம் கொடுக்கத்தான் போகிறது!

அதை உண்மையெனக் கொண்டாலும், யாருடைய கையை வலுப்படுத்தினார்களோ அதே காமராசரது கை சுப்ரமணியனாரின் சூழ்ச்சியின் முன்னே அசைவற்று விட்டது-என்பது உண்மையிலேயே கேலிக்குரிய செய்திதான்!

—காமராசரது நன்றி மறந்த தன்மையும்; இப்படிப்பட்ட சாதாரண மனிதருக்காக தந்தையார் வரிந்து கட்டிக் கொண்டு கழகக் கொடியோடு, எரிக்க வேண்டுமென்று முயற்சி செய்த காங்கிரஸ் கொடியையும் கையிலேந்திக் கொண்டு ஆதரவு தந்த தேவையற்ற செயலும், இனியாவது தப்பித் தவறி அந்தக் கூடாரத்தில் இருக்கும் நாட்டுப் பிரிவினையில் ஆர்வம் கொண்ட காளையரின் கண்களைக் கட்டாயம் திறந்தே தீருமென்றே நம்புகிறோம்! ஃ

# கொள்கைக்காக வெற்றி பெற்றோம்! கொள்கைக்காக வாழ்ந்திடுவோம்!

[குளித்தலைத் தொகுதியிலிருந்து சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆசிரியர் மு. க. அவர்கள், 26-3-57 அன்று லாலாப்பேட்டையில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில், ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம் இங்கே தரப்படுகிறது.]

அன்புள்ள தலைவர் அவர்களே! தோழர்களே! தாய்மார்களே! பெரியோர்களே! ஆர்வம் மிக்க நண்பர்களே! இளைஞர்களே!

இன்றைய தினம் மலையென மாலை குவித்து, அலையென ஆர்வமுள்ள முழக்கம் செய்து என்னை வரவேற்ற உங்கள் அனைவரின் ஊக்கத்தையும், உணர்ச்சியையும் நான் எப்படிப் பாராட்டி நன்றி தெரிவிப்பது என்று தெரியாது விழிக்கின்றேன்.

நான், திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் தேர்தலுக்கு நிற்கிறேன்; என்னை ஆதரிக்க வேண்டும் என்று லாலாப்பேட்டையில் முன்பு பேசினேன். இந்தக் கூட்டத்தில் பாதி அளவுக் கூட்டந்தான் அன்று இருந்தது. இத்தனைக்கும் குறித்த நேரத்தில் ஆரம்பிக்கப்பட்டது அது. ஆனால் இன்று இக்கூட்டம் குறித்த நேரத்தில் ஆரம்பிக்கப்படவில்லை. எனினும் அன்றைய தினம் கூடியிருந்ததைவிட இரண்டு பங்கு அதிகமான கூட்டத்தை நான் இங்கு காணுகிறேன். இதிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் லாலாப்பேட்டையில் எவ்வளவு வளர்ந்திருக்கிறது என்பது மிக மிக நன்றாகத் தெரிகிறது. 2,000—3,000 என்ற அளவில் இருந்த கூட்டம். 6,000—ஆக வளர்ந்திருக்கிறது என்றால்—அதுவும் மாலை 6-மணியிலிருந்து நடைபெற்ற ஊர்வலத்திலும் கலந்துகொண்டு—அந்தக் களைப்பை மறந்து—பலர் சாப்பாட்டையும் மறந்து — தூக்கத்திற்கும் கூட்டத்திற்குமிடையே கூடியிருக்கிறீர்கள் என்றால்—திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கை உணர்வு எந்த அளவில் உங்கள் உள்ளத்தில் பதிந்திருக்கிறது என்பதைத்தான் அது புலப்படுத்துகிறது.

இன்றைய தினம் உங்கள் முன்னிலையில், உங்கள் குடும்பத்துப் பிள்ளைகளில் ஒருவனாக நின்று கொண்டிருக்கும் நான் — சகோதரனாக நின்று கொண்டிருக்கும் நான்—வீட்டுச் செல்வங்களில் ஒருவனாக நின்றுகொண்டிருக்கும் நான் பெற்ற இந்த மாலைகள்—என் கழுத்திலே விழுந்த வெற்றி மாலைகள் — உங்கள் அனைவரின் கழுத்திலேயும் விழுந்த மாலைகள்தான்! நான் பெற்ற வெற்றி நீங்கள் பெற்ற வெற்றியாகும்!

இந்தத் தொகுதியில்—நான் முன்பே குறிப்பிட்டதுபோல என்னை எதிர்த்து பதினைந்து பேர் போட்டியிடுவதாக அறிவிக்கப்பட்டு, அது பதிமூன்றாக மாறி, பனிரெண்டாக ஆகி, பின் பதினொன்றாகத் தேய்ந்து, பிறகு நான் அடிக்கடி கேலியாகக் குறிப்பிட்டதுபோல 'தசாவதார'மாகி 'நவக்கிரகங்'களாக உருவெடுத்து, பின் 'அஷ்ட திக்கு பாலகர்'களாக மாறி—கடைசியில் ஏழு பேர் என்று முடிந்தது. என் ஒருவனை எதிர்த்து காங்கிரஸ் அபேட்சரை தவிர்த்து—எனக்கு விழவேண்டிய ஓட்டுகளை 4000, 5000—என்று சுயேச்சைகளை விட்டுப் பிரித்துவிடலாம் என்று நயவஞ்சக நரித்தன்மை செய்தும்—பலிக்காமல், அப்படியும் வெற்றி பெற இயலாமல்—உங்கள் ஒருமித்த ஆதரவால்—உங்கள் அன்புக்குரிய நான் வெற்றிக் களிப்போடு உங்களைச் சந்திக்கும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறேன்.

திராவிட முன்னேற்றக் கழகம் 120 இடங்களில் போட்டியிட்டு; 15 இடங்களில் வெற்றி பெற்றிருக்கிறது—என்பதையெல்லாம் நீங்கள் அறிந்ததே! 15 பேர்தான் சட்ட சபைக்குச் செல்லயிருக்கிறோம் என்றாலும் திராவிட முனனேற்றக் கழகத்திற்கு நாட்டிலே இருக்கும் செல்வாக்கு என்ன? மக்கள் உள்ளத்தில் அது பெற்றிருக்கும் மதிப்பு என்ன? பெருமை என்ன? மரியாதை என்ன?—என்று நீங்கள் ஒருமுறை சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

திராவிட முன்னேற்றக் கழகம் 15 இடங்களிலேதான் வெற்றி பெற்றது என்றாலும், போட்டியிட்ட 120 இடங்களிலும் பெற்ற ஓட்டுகள் எத்தனை? காங்கிரஸ் இந்த நாட்டிலே 205 இடங்களில் போக—மிகுதி 202 இடங்களில் தன் அபேட்சகர்களை நிறுத்தி வைத்தது என்றாலும். அது பெற்ற மொத்த ஓட்டுகள் எத்தனை? காங்கிரசுக்கு எதிர்ப்பாக விழுந்த ஓட்டுகள் எத்தனை என்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தால் நமக்கு மிகப்பெரிய உண்மை ஒன்று புலப்படும்.

நான் புள்ளி விபரங்களோடு சொல்ல விரும்புகிறேன். தமிழ் நாட்டில் காங்கிரஸ் போட்டியிட்ட அத்தனை இடங்களிலும் பெற்ற மொத்த ஓட்டுகள் 50, 40, 587 ஆகும்! அந்த இடங்களில் எல்லாம் காங்கிரசுக்கு எதிராக, ஒரே பெட்டியில் விழாமல்—திராவிட முன்னேற்றக் கழகப் பெட்டியில்—சோஷலிஸ்டுகளின் பெட்டியில்—பிரஜா சோஷலிஸ்டுகளின் பெட்டியில்—கம்யூனிஸ்டுகளின் பெட்டியில்—சுயேச்சைகளின் பெட்டியில்.... இப்படியாக பலப் பெட்டிகளில் காங்கிரசுக்கு எதிர்ப்பாக விழுந்திருக்கிற மொத்த ஓட்டுகள் 61 64, 766-ஆகும்! 61 லட்சம்பேர் காங்கிரசை விரும்பாமல்—'எங்களுக்கு காங்கிரஸ் தேவையில்லை' என்று எதிர்ப்பாக தீர்ப்பளித்திருக்கிறார்கள்! இந்தப் புள்ளி விபரங்களை வைத்துக்கொண்டு 'காங்கிரஸ் தேவையா, இல்லையா?' என்று ஆராய்ந்தால், அதை ஆதரிப்போரைவிட அதை விரும்பாதவர்கள் 11 லட்சம்பேர் அதிகம் இருக்கிறார்கள் என்பது புரியும்!

காங்கிரசை எதிர்த்து நின்ற கட்சிகள் எல்லாம் ஒன்று சேராத காரணத்தால்—தன்னந்தனியே போட்டியிட்ட காரணத்தால் — சுயேச்சைகளும் குறுக்கே வந்து 1000, 2000 என்ற அளவில் ஓட்டுகள் பெற்று 'டிபாசிட்'டையும் இழந்த காரணத்தால்தான்—காங்கிரஸ் பல இடங்களில் வெற்றிபெற முடிந்திருக்கிறது. இன்னும் சொல்லப்போனால் இந்தப் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் பெற்ற வெற்றி கொள்கைக்காகப் பெற்ற வெற்றி அல்ல; பணத்தால் பெற்ற வெற்றி! அதிகாரத்தால் பெற்ற வெற்றி! மக்களை ஏமாற்றிய வகையில் பெற்ற வெற்றி!

★ மு. கருணாநிதி ★

காரைக்குடியிலே ராஜா சர் முத்தையா செட்டியார் வெற்றி பெற்றார் என்றால், தனது கொள்கைகளை எடுத்துக் காட்டியா? காங்கிரசிலேயிருந்து நாட்டுக்கும் மக்களுக்கும் அவர் ஆற்றிய தொண்டுகளை விளக்கிக் காட்டியா? இல்லை; இல்லவே இல்லை!

மந்திரி காமராஜரைத்தான் எடுத்துக் கொள்வோமே—எந்த வகையில் அவர் வெற்றி பெற்றார்? நாம் கேள்விப்படுகிறோம், அவரது தேர்தல் அலுவலகத்தில் காங்கிரஸ் கொடியைக் கூட ஏற்றுவதில்லை என்று அந்தத் தொகுதி மக்களுக்கு உறுதி அளித்து—"நான் காமராஜ 'நாடா'ராக நிற்கிறேன்; நாடார் பெரு மக்களே! நான் உங்கள் ஜாதிக்காரன்! என்னை ஆதரிக்காவிட்டால் நம் ஜாதிக்கே ஆபத்து! எனக்கு ஓட்டளிக்காவிட்டால் நம் குலத்திற்கே அவமானம்!" என்று இத்தகைய பிரச்சாரத்தில் ஈடுபட்டு — காங்கிரஸ் கொடிக்குக்கூட மதிப்பளிக்காமல்—பலரும் பல விதத்திலே 2 லட்சம், 3 லட்சம் என்று செலவு செய்து—இவ்வளவுக்கும் பிறகு, கடைசியில் 4000 ஓட்டுகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்றிருக்கிறார். அதுபோலவே காமராஜர் பல இடங்களுக்கு அபேட்சகர்களைத் தேர்ந்தெடுத்த நேரத்தில், எல்லா இடங்களுக்கும் பெரிய பெரிய பணக்காரர்களை—ஜமீன்தார்களை நிறுத்தி—'ஓட்டு ஒன்றுக்கு ஐந்து ரூபாய், பத்து ரூபாய் என்று பணம் தர இயலுமா இவரால்? அந்த அளவுக்கு சீமான்தானா இவர்?' என்று கணக்குப் போட்டு—நிறுத்திய காரணத்தால்தான் இந்தத் தடவை காங்கிரஸ் வெற்றிபெற முடிந்திருக்கிறது! அல்லாமல்,

தனது கொள்கைகளைக் காட்டி அல்ல: கருத்துக்களை எடுத்துச் சொல்லி அல்ல; நாட்டுக்கு இன்னின்ன நன்மைகளைச் செய்து முடித்திருக்கிறேன் என்று விளக்கி அல்ல; வடநாட்டு அரசிடமிருந்து தென்னாட்டுக்கென்று இவ்வளவு தொகை பெற்று செலவு செய்திருக்கிறேன் என்று தைரியத்தோடு—துணிவோடுசொல்லி அல்ல; —காங்கிரஸ் வெற்றி பெற்றிருப்பது!

அவர்கள் பெற்ற வெற்றியில் முக்காலே மூன்று வீசம் வெற்றி பணத்தால்தான்; பணத்தால்தான்! இதை நேர்மையாகப் பெற்ற வெற்றி என்று அவர்களாலேயே

❋ தொடர்ச்சி 9-ம் பக்கம்



# அரசியின் அடிமை

பீ. சி. கணேசன், பி.எஸ்ஸி.பி.டி.

(சென்ற வாரத் தொடர்ச்சி)

சலனமற்றிருந்த பமீயாவின் உள்ளத்தில் சஞ்சல அலைகள் தோன்றியிருந்தன.

காதலன் யாகூத்தும், அரசி ருசியாவும் அவளுடைய உள்ளத்தையே களமாக்கிப் பலமான போர் ஒன்றை நடத்திக் கொண்டிருந்தனர். அதில் அவள் கட்சி என்ன? யாகூத்தின் காதல் வேண்டுமானால் அவள் நாட்டுக்குத் துரோகம் இழைக்க வேண்டும்; அது அவளால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாத ஒன்று. காதலைத் தியாகம் செய்துவிட்டு, காதலன் கண்ணெதிரிலேயே அவனைத் துரோகியென்ற தீர்ப்பும் அளித்த பின்னும் அவள் திருப்தியடையவில்லை. கடமையின் முக்கிய பகுதியொன்று நிறைவுறாமல் இருப்பதை அவளால் தெளிவாக உணர முடிந்தது.

நாட்டில் அரசிக்கு எதிராகத் துரோகக் கூட்டம் ஒன்று வளர்ந்து வருகிறது. அதில் அரசியின் உடன் பிறந்த தம்பி பெய்ராம், அரசியின் ஆணை கேட்டு நடக்க வேண்டிய கவர்னர் அல்தூனியா, மற்றும் பல ஓம்ராக்கள்...போதாக் குறைக்கு யாரை அரசி மலையென நம்பி ஆட்சி நடத்துகின்றாளோ, அந்த யாகூத்தே துரோகக் கூட்டத்திற்குத் தூணுவதென்றால்...? பமீயா சிந்தித்தாள். அரசிக்கு இந்த உண்மை தெரிய வேண்டாமா? தெரிவிக்க வேண்டியது அவளுடைய கடமைதானே?

யாகூத்தை, பமீயா அரசிக்குக் காட்டிக் கொடுக்க வேண்டும். அதுதான் அவளுடைய கடமையுங்கூட. அவளுடைய மூளை நரம்புகள் அதிர்ந்தன. உலகமே கட்டுக்கடங்கா வேகத்தில் திசை மாறிச் சுழன்றது. தொண்டை உலர்ந்தது. நாவறண்டது பக்கத்திலிருந்த கூஜா நீரை ஒரு கவளம் குடித்தாள். உடலெல்லாம் வெடவெடவென்று ஆடியது.

தூக்கம் இமைகளைத் தீண்டவும் மறுத்தது. ஜன்னல்களைத் திறந்துவிட்டாள். காற்று மெதுவாக வீசி சற்று சாந்தியளித்தது. அலைமோதும் உள்ளம் நிலையடைய அரண்மனை மலர் வனம் நோக்கிப் புறப்பட்டாள். அவள் வெளியேறிச் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் அரசி ருசியா பீகம் பமீயாவின் அறைக்குள் நுழைந்தாள்.

வழக்கம்போல் பமீயாவின் கட்டில் காலியாக இருந்தது. அரசி பற்களை நறநறவென்று கடித்துக்கொண்டாள்

கூலி வேலை செய்யும் வாலிபனுக்கு மையலைத் தீர்த்துக் கொள்ள மாளிகையில் இடம் அளித்து, விருதுகள் வழங்கி, மரியாதை செய்ய, அதை அவன் அலட்சியப்படுத்தி, பட்டமகிஷியை மதியாமல் பணிப்பெண்ணோடு சல்லாபித்துக் கிடப்பதா? ருசியாவிற்குப் போட்டியாக ஒரு பாரசீக இளவரசியோ, பைந்தமிழ் நாட்டுப்பேடு ஒருத்தியோ, ரோம் நாட்டுக்குடைய சிங்காரியோ இருந்திருந்தால் நிலைக்கேற்ற போட்டியென்றாவது எண்ணி நிம்மதியடைந்திருப்பாள்!

ஆனால் பட்டத்துடையாளுக்குப் போட்டியாக, அவளாலேயே பராமரிக்கப்படும் பணிப்பெண்! கலாப மயில் கண்ணீர் வடிக்க, வான்கோழிக்கு வகையான வாழ்க்கை அமைவதா? ருசியா அலங்கார தேவதையாக நின்று அடிமையிடம் ஆன்புப் பிச்சை கேட்ட நேரத்தில் அவன் அதை உதாசீனம் செய்தான். இனிமேல் ருசியா அரசி; யாகூத் அடிமை!

இனி அவள் குழைய மாட்டாள். கோபக் கணை தொடுப்பாள். கொடுமையை உமிழ்வாள். பலர் முன்னிலையில் அவன் அடிமை என்பதைக்கூறி அவமானப் படுத்துவாள். அவன் உள்ளம் சாம்பவேண்டும்; அவள் அதைக்கண்டு குதூகலிப்பாள். பமீயாவின் அறையில் நின்றபடியே பீகம் திட்டம் தீட்டிக்கொண்டிருந்தாள். திடீரென்று யாரோ அறையை நோக்கி அடிமேல் அடிவைத்து மெதுவாக நடந்து வரும் ஓசை கேட்டது. உடனே பமீயாவின் படுக்கையில் போய்ப் படுத்து, போர்வையால் போர்த்திக் கொண்டாள்.

"பமீயா!"

"யாரது?"

"நான்தான், அமீனுல்லா. யாகூத் கடிதம் கொடுத்திருக்கிறார்."

"கடிதத்தை மேஜையின்மீது வைத்துவிட்டு உடனே போய் விடு. அரசி கண்ணில் பட்டுவிடப் போகிறாய்."

"வருகிறேன்!"

ருசியா சாமர்த்தியமாக பமீயாவாக நடித்து நிலைமையைச் சமாளித்தாள். வந்த ஆள் கடிதத்தை வைத்துவிட்டு அறையிலிருந்து வெளியேறினான். அவன் அறையின் வாயிற் படியைத் தாண்டுதற்குள். இடுப்பில் சொருகியிருந்த கட்டாரியை எடுத்து அவன் முதுகின்மேல் பலமாக வீசினாள். அவன் 'ஐயோ' என்று அலறியபடியே மாடிப்படிகளில் உருண்டு கீழே போய் விழுந்தான். அரசி எதுவுமே நடக்காததுபோல் சாவதானமாக எழுந்து, கடிதத்தை எடுத்துப் படித்தாள்.

"பமீ,

சதியை இனி எந்த சக்தி கொண்டும் அடக்கமுடியாது. அல்தூனியாவும் பெய்ராமும் படை நடத்திப் புறப்பட்டுவிட்டார்கள். படைத் தளபதியே நான்தான். புள்ளிமான் நீ, இனியும் அந்தப் புலியை நம்பி வாழ்வதில் பயனில்லை; கொடுங்கோலுக்குத் துரோக மிழைப்பதே குடி மக்களுக்குச் செய்யும் கடமையாகும்.

—யாகூத்

பின் குறிப்பு: கடிதத்தை உடனே கிழித்துவிடு"

அரசி திக்பிரமை பிடித்து நின்றாள்!

அடிமை யாகூத்தின் முன் அவள் விலங்கிடப்பட்டு நிற்கிறாள். யாகூத் அவளைப் பார்த்துக் கேலிச் சிரிப்பு சிரிக்கிறான். பக்கத்தில் தோளோடு தோள் உராயும்படி பமீயா அமர்ந்து இந்தக் காட்சியை ரசித்துக் கொண்டிருக்கிறாள். வருங்காலம் இப்படி நிழற்படமாக அரசியின் கண்களின்முன் ஓடி மறைந்தது.

அரசி பேய்ச் சிரிப்பு சிரித்தாள்.

மாடிப்படிகளில் அமீனுல்லா உருண்டு விழுந்த ஓசையைக் கேட்ட பமீயா, தோட்டத்திலிருந்து வேகமாக ஓடிவந்து பார்த்தாள். அமீனுல்லா இரத்தக் குட்டையில் மிதந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்தவுடனேயே பமீயாவின் உள்ளத்தில் ஒரு திகில் தோன்றியது. அமீனுல்லா, யாகூத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமான வேலையாள் என்பதைப் பமீயா அறிவாள்.

"அமீனுல்லா, என்ன நடந்தது?" என்றாள் அவனைப் புரட்டியபடியே.

அமீனுல்லா கொஞ்சம் சுய உணர்வு பெற்றான். மெதுவாகக் கண் விழித்து, பமீயாவை ஒரு முறை வெறித்துப் பார்த்தான்.

"துரோகி!" — அமீனுல்லா பேசிய ஒரே வார்த்தையும் கடைசி வார்த்தையும் அதுதான். அதற்குப் பிறகு கண்ணை மூடிய அவன் திறக்கவேயில்லை!

பமீயாவை இந்த வார்த்தை சுருக்கென்று தைத்தது. அவளுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. என்ன துரோகம் அவள் செய்தாள்? யாருக்குச் செய்தாள்? ஒன்றுமே விளங்கவில்லையே! அவள் மனம் குழம்பியது.

ஐயோ, இதென்ன, அமீனுல்லாவின் முதுகில் கட்டாரி

❋ தொடர்ச்சி 8-ம் பக்கம்

## நீட்டோலை

அன்புள்ள பொன்முடி,

தமிழகத்திலே நடைபெற்று முடிந்த தேர்தலிலே முக்கிய மான முடிவு என்ன என்று கேட்டிருக்கிறாய்.

சொல்கிறேன் கேள்: புல்கானின் — குருஷேவ் வருகையின்போதே பண்டித நேருவின்பால் அடகு வைக்கப்பட்டிருந்த கம்யூனிஸ்ட் கட்சி தமிழகத்தைப் பொறுத்தவரையில் தவிடு பொடியானதுதான் இப்போது முக்கிய செய்தியாக இங்கு இருந்து வருகிறது!

சென்ற பொதுத் தேர்தலின் போது பல முற்போக்கு சக்திகளின் உதவியுடன் பதினைங்கு பேர் கம்யூனிஸ்ட் கட்சியின் பிரதிநிதிகளாகச் சட்டசபைக்குள்ளே இருந்தார்கள். இப்போதோ நான்கே பேரைத்தான் உள்ளே அனுப்பி வைத்திருக்கிறது மக்கள் சக்தி!

முன்பு 14!

இப்போது 4!

—எவ்வளவு பெரிய வேறுபாடு பார்த்தாயா?

சென்ற தேர்தலில் ஆந்திராவிலே அவர்கள் கட்டியிருந்ததாகக் கருதப்பட்ட கோட்டை தூள் தூளாகச் சிதறியதைப் போலவே இப்போது தமிழகத்திலும் அவர்கள் சின்னாபின்னமாகச் சிதறிப் போயிருக்கிறார்கள்!

சிறையிலிருந்தவாறே வெற்றி பெற்றவர்—

வீடு வீடாக ஏறி இறங்காமலேயே வெற்றி தன்னைத் தேடிக் கொண்டு வரச் செய்தவர்—

—இப்படியெல்லாம் விருது பெற்றதாகக் கருதிக் கொண்டு தலை நிமிர்ந்து நடந்தார்கள், சென்ற தேர்தல் முடிவிலே கம்யூனிஸ்ட்டுகள்!

இன்றோ நிமிர்ந்து நின்ற அவர்கள் தலையைக் காணோம்—குனிந்து கொண்டிருக்கிறார்கள்! தரையைப் பார்த்து நடக்கிறார்கள், தரை மட்டமானவர்கள்!

தனக்கு ஒரு கண் போனாலும் எதிரிக்கு இரண்டு கண்ணும் அழிய வேண்டுமென்று நினைத்த இழி குணத்தவனைப் பற்றி நீ கதை கேள்விப்பட்டிருப்பாய்! அந்த இழி குணத்தவரினும் கேடுகெட்டவர்கள் இன்றைய அரசியலில் உண்டு என்றால் அவர்கள் வேறு யாருமல்ல; தமிழ் நாட்டைப் பொருத்தவரையில் கம்யூனிஸ்ட்டுகள்தான் அந்தப் பெயருக்கு உரியவர்களாகிறார்கள்!

பல இடங்களில் கம்யூனிஸ்ட்டுகள் நமது 'தந்தையர் கழகத்தவர்களை'விட மோசமான முறையிலே நடந்து கொண்டு; காங்கிரசின் வெற்றிக்காக அரும்பாடு பட்டிருக்கிறார்கள்!

தங்களுக்கு ஒரு கால் போய் விட்டது என்று தெரிந்ததும்; தி. மு கழகத்துக்கு இரு கால்களும் போக வேண்டுமென்ற தீய நினைப்பில் அவர்கள் கொள்கையை அங்காடிப் பொருளாக நினைத்து விலை பேசியிருக்கிறார்கள்!

21—3—57 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஏட்டிலே வந்த செய்தியைப் படித்திருக்கலாம்; அவர்கள் காங்கிரசை அழிப்பதை விட தி. மு. க. வை அழிப்பதிலேதான் வெட்கமின்றி தங்களைச் சுட்டுக் கொன்ற காங்கிரசுடன் கூட கூட்டுச் சேர்ந்து உழைத்திருக்கிறார்கள்!

நாம் என்ன கேடு செய்தோம் அவர்களுக்கு? அவர்கள் நடத்திய எந்தப் போராட்டத்திலே நாம் குறுக்கே நின்றிருக்கிறோம்?

சேலம் சிறைச்சாலையிலே அவர்கள் பிணமாக விழுந்த போது நாம் தின்பண்டம் வழங்கி திருவிழாக் கொண்டாடினோமா?

கேரளத்துச் சிறைச்சாலையிலே தண்ணீர் கேட்ட கம்யூனிஸ்ட் கைதிக்கு மூத்திரத்தைக் கொண்டுவந்து நீட்டிய போலீஸ் அட்டூழியத்தைக் கண்டு 'சபாஷ்' போட்டோமா? என்ன தீங்கு செய்தோம் நாம்? எதற்காக அவர்கள் நம்மை எதிரிகளாகக் கருத வேண்டும்?

—இப்படியெல்லாம் கேட்டிடத் துடிக்கும் அந்த நன்றி கொன்றவர்களைப் பார்த்து!

அன்புள்ள பொன்முடி! திராவிட முன்னேற்றக் கழகம் தமிழகத்துக் கம்யூனிஸ்ட்டுக் கட்சிக்கு செய்துவிட்ட மாபெரும் தீங்கு — மன்னிக்க முடியாத பெருந் தவறு-ஒன்று இருக்கிறது!

அதுதான் திராவிட முன்னேற்றக் கழகம் தமிழகத்தின் உண்மையான கம்யூனிஸ்ட்டுக் கட்சியாக விளங்குவதாகும்!

—இவ்வளவு பெரிய தீங்கு செய்துவிட்ட தி மு. கழகத்தை எப்படித் தோழனே கம்யூனிஸ்ட்டுகளால் மன்னிக்க இயலும்!

அதனால்தான் பொருமுகிறார்கள்! கருவாடு பறிகொடுத்த அக்ரகார மாதினைப்போல உள்ளம் குமுறிக் கொண்டிருக்கிறார்கள்! பதினைங்கு 4-ஆகி வரும் தேர்தலில் இந்த 4-ம் ○ ஆகி விடுமோ என்று கலங்குகிறார்கள்!

அவர்கள் கலங்குவதிலும் கவலைப்படுவதிலும் பொருள் இருக்கத்தான் செய்கிறது!

உதாரணமாகத் தஞ்சை மாவட்டத்தை எடுத்துக் கொள்வோம்.

சென்ற தேர்தலிலே தஞ்சையில் மொத்தம் இருந்த 19 இடங்களில் கம்யூனிஸ்டுகளுக்கு மட்டும் 6 இடங்கள் கிடைத்தன!

19-க்கு 6 என்றதும் தஞ்சையை அவர்கள் கம்யூனிஸ்டுகளின் கோட்டையாகத்தான் கருதிக் கொண்டிருந்தனர்.

அதை நம்பிக் கொண்டுதான் கோட்டையைக் காவல் புரியச் சென்ற தோழர்கள் ஜீவானந்தமும், ராமமூர்த்தியும் கூட கோட்டை விட்டிருக்கின்றனர்!

அத்தகைய மணற் கோட்டையிலே இந்தத் தடவை மொத்தம் இருபது இடங்களில் ஒரு இடத்தைக்கூடக் கைப்பற்ற முடியவில்லை, கம்யூனிஸ்டுகளால்!

—இதற்கு என்ன காரணமாய் இருக்க முடியும்?

'விடுதலை' எழுதுகிறது. எங்கள் ஆதரவு இல்லை; அதனால்தான் கம்யூனிஸ்ட்டுகள் மண் கவ்வினார்கள்—என்று!

பரவாயில்லை; அந்தத் திருப்தியாவது அவர்களுக்கு இருந்து விட்டுப் போகட்டும்.

இப்போது உண்மைக் காரணத்தைக் கவனிப்போம்.

சென்ற தேர்தலில் 6 இடங்களைப் பிடித்த கம்யூனிஸ்ட்டுக்குக் கிடைத்த ஓட்டு சதவிகிதம் 26.25.

இந்த தேர்தலில் ஒரு இடமும் பிடிக்காத கம்யூனிஸ்ட்டுகள் பெற்ற ஓட்டு சதவிகிதமோ 19 தான்!

ஆனால் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கோ தஞ்சை மாவட்டத்தில் மட்டும் 14.6 சதவிகித ஓட்டுகள் கிடைத்திருக்கிறது.

இதை வைத்துக் கொண்டு 'இந்து' பத்திரிகை தலையங்க வாயிலாக எழுதுகிறது:

ஓட்டுக்கள் பதிவானதை வைத்துக் கணக்கிட்டால், தஞ்சாவூரில் கம்யூனிஸ்ட்டுகள் இழந்ததை விட — அவர்கள் பலத்தை இழந்திருக்கிறார்கள்! என்பதில் மட்டும் சந்தேகமில்லை — அதிக அளவில் ஒரு இடத்தையும் சேர்த்துக் கொண்டிராத தி மு. க. லாபமடைந்திருக்கிறது

—இது இம்மாதம் 23-ம் தேதி 'இந்து' தலையங்கத்தின் ஒரு பகுதி!

இன்னொரு இடத்தில் எழுதும்போது "தி. மு. க. விடம் இழந்ததாகத் தெரிகிற கம்யூனிஸ்டுகள்"— என்னும் பொருள் படவே எழுதிச் செல்கிறது.

—இப்போது கூறு, பொன்முடி! யானையும் யானையும் மோதிக் கொண்டால் இடையிலே அகப்பட்ட எறும்பு இருந்த இடம் தெரியாமல் நசுங்கிப் புழுதியாகி; காற்றோடு கலந்து விடுவதைப் போல நமக்கும் காங்கிரசுக்கும் நடந்து வந்த போராட்டத்திலே அகப்பட்டுக் கொண்டு; மக்கள் மன்றத்தை விட்டே ஓடி ஒளிந்து கொள்ளும் நிலையில் இருக்கிறது, தமிழ் நாட்டுக் கம்யூனிஸ்ட்டுக் கட்சி!

'இந்து' குறிப்பிடுகிறபடி தஞ்சையில் மட்டுமல்ல; எங்குமே அவர்களுக்குத் தோல்வி! படுதோல்வி!!

அங்கே முக்கியமானவர்களைக்கூட பொது மக்கள் சட்டசபைக்கு அனுப்பி வைக்க வேண்டுமென்று நினைக்கவில்லை.

ஐந்தே ஆண்டுகளுக்குள் இமாலயச் சரிவு கதிர் அரிவாள் கூடாரத்திற்குள் ஏற்படுவானேன்?

காரணம், மக்கள் மன்றம் அவர்களை உணர்ந்து கொண்டு விட்டது. அவர்களது உண்மை சொரூபம் மிக நன்றாகத் தெரிந்து விட்டது.

நடுவு நிலைமை கொண்ட மக்கள்தான் மொத்தம் பத்து இடங்களில் கம்யூனிஸ்ட்டுகளைப் புறக்கணித்திருக்கிறார்கள்; பதினைந்து இடங்களில் தி. மு. க. வைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் என்றால் என்ன பொருள்?

ஒரே பொருள்தான் இருக்க முடியும்—

திராவிட முன்னேற்றக் கழகம் தான் இன்று தமிழகத்தில் இயங்கி வரும் உண்மையான பொதுவுடைமைக் கட்சியாகும்! அதனால் தான் தேவையற்ற கம்யூனிஸ்ட்டுகளை அவர்கள் அறவே ஒதுக்கி யெறிந்திருக்கிறார்கள்!

பிற அடுத்த கடிதத்தில்!

இங்ஙனம்,

பொன்முடி.



# 'கனா'-காமராசருக்கு ஒரு பாடம்!

ஆப்பிரிக்காவின் ஒரு பகுதியிலே விடுதலைக் கதிரவன் உதயமாகியிருக்கிறான்!

இருண்ட கண்டம் என்று பெயர் பெற்றது ஆப்பிரிக்கா! அந்தப் பெயருக்கு ஏற்றவாறே அங்கே ஆதிபத்திய இருள் மண்டிக் கிடந்தது. மடமை இருள் மூடியிருந்தது!

நிறவெறியின் கோரத் தாண்டவம் உரிமை வெறி கொண்ட ஆப்பிரிக்கரை சுட்டுக்கொன்று அந்தப் பிணக் குவியலிலே நின்று கொக்கரித்தது!

இன்று அதன் ஒரு பகுதியிலே அமைந்திருக்கும் கோல்ட் கோஸ்ட்—பொன்நாடு என்று பெயர் பெற்ற அந்தப் பொன்விளையும் பூமி தனியுரிமை பெற்று விட்டது!

இம்மாதம் ஆறும்தேதி இரவு அங்கே பிரிட்டனின் கொடி இறக்கப்பட்டு, சுதந்தர நாட்டின் கொடி பட்டொளி வீசிப் பறக்கவிடப்பட்டிருக்கிறது!

ஒரு ஆண்டா; இரு ஆண்டா; இருநூறு ஆண்டுகள் பிரிட்டன் அந்தப் பொன்விளையும் பூமியை தனது காலடியின் கீழே அழுத்தி வைத்திருந்தது.

அங்கேதான் குவாமே நக்மோ என்னும் விடுதலைத் தலைவர் சுதந்தரப் போராட்டத்துக்குத் தலைமை வகித்து, இழந்த உரிமையை மீண்டும் பெற்றிட போர் முரசு கொட்டினார்!

அவரது தலைமையின் கீழே அணி அணியாய்த் திரண்டார்கள் பொன் நாட்டுப் பெரு மக்கள்!

ஆயுதங்களேந்தி அன்னியரை விரட்டியடிப்பதைவிட அறவழி மேற்கொண்டு ஆதிபத்தியக்காரருக்குச் சாவுமணி அடிப்பதே சாலச் சிறந்தது என்று கருதினார்கள், அவர்கள்!

துப்பாக்கி வேட்டுகளைவிட ஒத்துழையாமையும், அமைதியான மறியலும் அதிகப் பலன் தரும் எனக் கண்டு கொண்டார்கள், அவர்கள்!

அதனால்தான் கத்தியின்றி இரத்தமின்றி யுத்தம் நடத்தி; பீரங்கியின் துணையை நாடாமல்; பதுங்கியிருந்து அழிவு வேலையை மேற்கொள்ளாமல் பாரெல்லாம் போற்றும் விதத்திலே அவர்கள் விடுதலை பெற்றிருக்கிறார்கள்!

காந்தியார் அமைதி வழிப் போராட்டத்தைக் கண்ட இடம் ஆப்பிரிக்கா!

அந்த அறவழிப் போராட்டம் இப்போது பிறந்த இடத்திலேயே மீண்டுமொரு வெற்றியைத் தேடிக் கொடுத்திருக்கிறது!

குவாமே நக்மோ — பொன் நாட்டின் விடுதலைக்காக பல ஆண்டுகள் வெஞ்சிறையிலே வாடியிருக்கிறார்!

இரும்புக் கம்பிகளைப் பிடித்தவாறே என்றுதான் திருந்துவரோ எனதருமைச் சமுதாயம்?—என்று கண்ணீர் வடித்தவாறே மேற்கொண்டு நடத்த வேண்டிய போராட்டங்களுக்கான திட்டங்களைத் தீட்டியிருக்கிறார்!

ஒரு நாள் அவர் பாதுகாப்புக் கைதி—இன்று அவர் பொன் நாட்டின் பிரதமர்!

ஒரு சமயம் அவர் தேசத் துரோகி—ஆங்கில ஏகாதிபத்தியத்திற்கு முன்பு!

இன்றோ அவர் தேசத் தியாகி—நாட்டு மக்களின் முன்பு!

அன்று அவர் வாயைத் திறந்தால் சட்டம் அவரை முற்றுகையிடும்! உரிமை முழக்கமிட்டால் அவர் உதடுகளைத் தைப்பதற்கு ஊசி முனைகள் நீட்டப்படும்!

இன்றோ அவர் பேச்சிலே தான் பொன் நாட்டின் புது வாழ்வு அடங்கியிருக்கிறது— என்ற எண்ணம் பரவி விட்டது, மக்கள் மன்றத்திலே!

இரும்பு விலங்கு பூட்டப்பட்டிருந்த கரங்கள், அந்தக் கரங்களிலேதான் இப்போது பொன் நாட்டின் செங்கோல் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது!

சட்ட மன்றத்திலே—நீதிக்காக வேண்டி குற்றவாளிக் கூண்டிலே கால்கடுக்க நிறுத்தி வைக்கப்பட்டிருந்த உருவம் இன்று அரசவைக் கூடத்திலே ஒரு நாட்டின் பரிபாலனத்தையே தலைமையேற்று நடத்துவதற்கு தகுதி பெற்றிருக்கிறது!

—இந்தப் புரட்சி ஏற்படுவதற்கு ஆங்கில ஏகாதிபத்தியம் புறமுதுகிடப் பட்டிருக்கிறது! இருநூறாண்டு கால அன்னிய ஆட்சியின் இடுப்பு ஒடிக்கப் பட்டிருக்கிறது!

ஆப்பிரிக்காவிலுள்ள நாடுகளிலே மட்டும் 17 கோடி மக்கள் அன்னிய ஆட்சியின் கோரப் பிடியிலே சிக்கித் தவித்துக் கொண்டிருக்கிறார்கள்!

—அவர்களுக்கெல்லாம் 'பொன் நாட்'டில் தோன்றியிருக்கும் விடுதலைப் பரிதி வழி காட்டும் கலங்கரை விளக்கமாய் இருக்கட்டும் என்று வாழ்த்துகிறோம்!

முன்பொரு முறை ஆட்லி குறிப்பிட்டிருக்கிறார்:

"பயங்கர வாதிகள் என்று குற்றம் சாட்டப்பட்டு காராக்கிரகத்திலே அடைத்து வைக்கப் பட்டோர் பின்னர் காமன்வெல்த் நாட்டின் பிரதமர்களாக மாறியிருக்கிறார்கள்"—என்று!

—அந்த மாற்றம் நடந்தேறி விட்டது இப்போது பொன் நாட்டிலே!

பயங்கரவாதி என்று கருதப் பட்ட நக்மோ இப்போது பிரதமராகி விட்டார்.

அந்த மாற்றம் மட்டும்தானா நடைபெற்றிருக்கிறது?

இன்னொரு குறிப்பிடத்தக்க மாற்றமும் நடந்தேறியிருக்கிறது!

'கோல்ட் கோஸ்ட்' — ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் வழங்கி வந்த அந்த நாட்டின் பெயர்!

கனா — மார்ச் 6-ம் தேதி இரவு 12 மணிக்குப் பிறகு; அரசாங்க மாளிகையிலே சுதந்தரக் கொடி பறக்க விடப் பட்ட பிறகு அந்த நாட்டுக்குச் சூட்டப்பட்டிருக்கின்ற புதுப் பெயர்!

கோல்ட் கோஸ்ட் — மார்ச் மாதம் 6-ம் தேதிவரை உலகம் தெரிந்த பெயர்!

அட்லாசிலே அந்தப் பெயர் தான் இன்றும் இருக்கிறது!

இருந்தும்; கோல்ட் கோஸ்ட் —உலகம் தெரிந்த பெயராயிற்றே; அதை மாற்றலாமா? —என்று அங்கே எந்த பக்த வத்சலங்களும் சுப்ரமணியங்களும் கேலிக்குரிய கூக்குரல் எழுப்பவில்லை!

கனா—என்று புதுப் பெயரை —நேற்றுவரை உலகத்துக்குத் தெரியாமலிருந்த பெயரைத் தங்கள் தாய்த்திரு நாட்டுக்குச் சூட்டினார்கள்—இன்றோ அது அகில உலகத்திற்கும் தெரிந்துவிட்ட பழைய பெயராகி விட்டது!

கனா—இலக்கியத்தில் கிடையாதே என்று அங்கு யாரும் பேசவில்லை; கேட்கவில்லை. எழுதவில்லை ஏனெனில் அங்கு தாயகத்திற்குத் துரோகம் நினைக்கும் காமராசர்கள் கிடையாது!

இங்குதான் இருக்கிறார்கள் சென்னைக்குத் தமிழ்நாடு எனப் பெயரிட மறுக்கின்ற இனத் துரோகிகள்; மொழித் துரோகிகள்; மக்கள் துரோகிகள்— ஏராளமாக இருக்கிறார்கள்—தடித்த கதர்ப் போர்வையை மூடிக் கொண்டு!

அறியாமை இருளில் தூங்கிக் கொண்டிருக்கும் அவர்களையெல்லாம் 'கனா' தட்டி எழுப்பட்டும்; நல்லுணர்வை ஊட்டட்டும்! ✻

'கனா'—என்ற புதுப் பெயருடன் விடுதலை பெற்ற கோல்டு கோஸ்ட் நாட்டின் தலைவர் குவாமே நக்மோ!

✽ 5-ம் பக்கத் தொடர்ச்சி

யொன்று குத்தி யிருக்கிறது! கொலை! யார் செய்தார்கள்? கட்டாரியை அவன் முதுகிலிருந்து பிடுங்கினள். அந்தக் கட்டாரியில் அரசியின் முத்திரை பொறிக்கப்பட்டிருந்தது.

அரசியா அமீனுல்லாவைக் கொலை செய்து விட்டார்கள்? —கட்டாரியைக் கையில் ஏந்தியபடியே அறையை நோக்கி ஓடினள்.

ஏமாற்றமும், வஞ்சமும்கண்களில் ஒளி விட்டெரிய அரசி ருசியா பீகம் கையில் கடிதத்தோடு நின்று கொண்டிருந்தாள்.

"பீகம், என்ன காரியம் செய்து விட்டீர்கள்!" என்ருள் பமீயா, நாக்குழற!

"துரோகி!" என்று கூறி விட்டுப் பமீயாவின் கன்னங்களில் மாறி மாறி அறைந்தாள் அரசி. பமீயா ஏதும் புரியாமல், அடியைத் தடுக்கவும் முயற்சிக்காமல் அப்படியே நின்ருள்; அரசி ஓய்ந்தவுடன் பொறுமையாக, "ஆத்திரம் தீர்ந்ததா பீகம்?" என்ருள் பமீயா.

"மோசக்காரி! அடிமையை ஆசை நாயகனுக்கிக் கொண்டதோடு மட்டுமல்லாமல், அவனோடு சேர்ந்து ஆட்சியைக் கவிழ்க்கும் சதி வேலையில் வேறு ஈடுபட்டு விட்டாய்! பாரடி இந்தக் கடிதத்தை! எந்த சக்தியும் முறியடிக்கமுடியாதாம், இந்தப் பேடிகளின் சக்தியை' பாம்புக்குப் பால் வார்த்ததின் பலன் இது; சண்டாளி!" என்று வசை வள்ளலாக அவச்சொற் கணை வீசினள் அரசி!

"பீகம், நான் நிரபராதி!"—பமீயா தேம்பித் தேம்பி அழுதாள்.

"அப்படி எண்ணி ஏமாந்து போக பீகம் பயித்தியக்காரியல்ல; அரசியின் அன்பில், அரவணைப்பில் இதுவரை சோகத்தின் நிழல்கூடப் பட்டறியாத சுந்தரியாக வாழ்ந்தாய். அரசியின் கோபத்தழலில் எரிந்து சாம்பலாகிவிடும் சருகுதான் நீயும் அந்த அபிசீனிய அடிமையும் என்பதை சீக்கிரமே உணரச் செய்கிறேன்," என்று கூறிவிட்டு மணியை அடித்தாள். போர் வீரர்கள் இருவர் கட்டாரியும் கையுமாக இருந்த பமீயாவைக் கைது செய்தனர்.

போர் வீரர்களின் இரும்புக் கரங்களில் சிக்கிய அந்தப் பூங்கொடி, "பீகம், பீகம்" என்று கூச்சலிட்டுக் கொண்டே சென்ருள். அவள் கூச்சல் இரவின் அந்தகாரத்தில் பயனில்லாமல் எதிரொலித்து மறைந்தது.

8

வாழ்க்கையிலேயே மிகப் பெரிய நெருக்கடியொன்று, ருசியாவை எதிர்நோக்கி நின்றது. சதியும் துரோகமும் அவள் ஆட்சிக்கு—இல்லை, அவளுடைய ஆணவத்திற்கு சவால் விட்டுக் கிளம்பிவிட்டன. வீரம் செறிந்த யாகூத், ஆணழகன் அல்தூனியா, அருமைச் சகோதரன் பெய்ராம்—இந்த முப்பெரும் சக்திகளுமல்லவா அவளுக்கு எதிராக அணி வகுத்து நிற்கின்றன! இந்த எதிர்ப்பைப் பெற அவள் என்ன தீமைதான் செய்துவிட்டாள்?

ருசியா பெண்; ஆனலும் ஆயிரம் ஆண்களுக்கு ஈடு கொடுக்கக்கூடிய ஆற்றலும் அறிவும் அவளிடம் இருந்தது என்று காலஞ்சென்ற அவள் தந்தை மனமார நம்பினர். ஆகவேதான், தான் தலைநகரில் இல்லாதபோது, தன்னுடைய பிரதிநிதியாக அவளையே நியமித்துச் செல்லுவது அவருடைய வழக்கமாக இருந்தது. ஆகவே, அவளுடைய சகோதரர்கள் வஞ்சகமாக அவளுக்குச் சதிசெய்யக் காத்திருந்தார்கள். பெய்ராம், பாதுஷாவாக எதையும் செய்யக் காத்திருந்தான். தவிர, பெண் ஆட்சி பீடம் அமர்ந்து ஆணையிடுவதை ஓம்ராக்கள் அறவே வெறுத்தனர். அதிலும் ருசியா, விசாரணை மண்டபங்களில் ஆணுடன் அமர்ந்து, அரசாங்க அலுவல்களை ஆராய்ந்து தீர்ப்பளித்தாள். குதிரைமீதேறி பவனி வருவாள். யானை மீதேறி வேட்டைக்குச் செல்லுவாள். நாணமும் அச்சமும் அவள் அருகில் வரவும் நாணிப் பின் வாங்கின. இஸ்லாமியப் பெண்ணொருத்தி இப்படிச் சாஸ்திர சம்பிரதாயங்களைக் காற்றில் பறக்கவிட்டு தான்தோன்றியாய்த் திரிவது வைதீக உள்ளங்களில் வெறுப்புணர்ச்சியை வளர்த்தது. பெண்மையின் குறைபாடுகளால் நிர்வாகத்தில் ஊழல் மலியும்; பசியும் பஞ்சமும் தாண்டவமாடும் என்று பிரபுக்கள் போட்ட கணக்குப் பொய்யாயிற்று. ருசியாவின் ஆட்சி சீரும் சிறப்பும் பெற்று விளங்கியது. ஓம்ராக்கள் செய்வதறியாமல் விழித்தனர். அவளுடைய பொது வாழ்வில் குறைகாண முடியாதவர்கள் தனி வாழ்வில் குறை காணத்தொடங்கினர். ஆற்றல் படைத்தோர் பலரிடம் காணப்படும் ஒழுக்கக் குறைவு அவளிடமும் இருந்தது. அவர்கள் எதிர்ப்பணி அமைக்கத்தக்க காரணமாக அமைந்தது யாகூத்தையும் அவளையும் இணைத்து கதைகள் பல ஜோடிக்கப்பட்டு மக்களிடையே சொல்லப்பட்டன. கதையின் பின்னணியில் ருசியாவின் நடவடிக்கைகளைக் கவனிக்கத் தலைப்பட்ட மக்கள், கதைகளை ஊர்ஜிதப் படுத்த சான்றுகள் பல இருப்பதாக நம்பினர். அரசியின் போக்கும் அவர்கள் சந்தேகத்தை வலுப்படுத்தியது. நாட்டில் புரட்சி தோன்றவே ஓம்ராக்கள் ஒன்று திரண்டனர்.

ருசியா நிகழ்ச்சிகளையெல்லாம் எண்ணிப் பார்த்தாள். காலைக் கதிரவனின் பொன் வண்ணக் கிரணங்கள் அவள் சிவந்த நெற்றியில் வியர்வைத் துளிகளை அரும்பச் செய்திருந்தது. இருபத்தைந்து வயதைக் கூட எட்டிப்பிடிக்காத இளம் பெண், சொந்த வாழ்விலும் பொது வாழ்விலும் ஒன்றோடொன்று தொடர்புடைய நெருக்கடியான பிரச்சினைகள் பயமுறுத்த எண்ணங்கள் குழம்பினலும் மனப்பலம் குறையாமல் செயலில் ஈடுபட திட்டங்கள் தீட்டியபடியே வீற்றிருந்தாள்.

"பீகம்...!"

பீகம் தலை நிமிர்ந்தாள் விசாரணை மண்டபத்துச் செய்தியாள் தலைவணங்கி மரியாதை செய்தான்.

"ஹூம்...என்ன விசேஷம்?" என்ருள் பீகம்.

"ஓம்ராக்கள் சபைகூடியிருக்கிருர்கள். உங்களுக்கு விஷயத்தை அறிவித்து அழைத்து வரச் சொன்னர்கள்......"

"என்ன, ஓம்ராக்கள் எனக்குக் கட்டளையிட்டிருக்கிருர்களா? சபாஷ்! நீ போ, நான் வரும்வரையில் அவர்களைக் காத்திருக்கச் சொல்!"

செய்தியாள் வெளியேறினன். பீகத்தின் முகத்தில் ஒரு அலட்சியப் புன்னகை நெளிந்தது. இடுக்கண் வந்துற்ற போது நகும் அந்த உயர்ந்த அரசியல் அறம், இந்த நெருக்கடியிலும் பீகத்திடம் வெளிப்பட்டது. ஆடவரையும் அச்சுறுத்தும் போர் உடைபூண்டு, எந்த நிலைமையையும் சமாளிக்கும் இதயத்தோடு, ஓம்ராக்களின் சபைநோக்கிப் புறப்பட்டாள்.

அரசி சபையில் நுழைந்தவுடன் ஓம்ராக்களிடம் ஒரு அமைதி நிலவியது. அவளுடைய ஆசனத்தில் அமர்ந்தவுடன், கொஞ்சமும் கலக்கமின்றி எல்லோருடைய முகங்களையும் ஒருமுறை பார்த்தாள். ஏதோ ஒரு முடிவுடன் அவர்கள் வீற்றிருப்பது தெரிந்தது. அவர்களில் யாரும் பேசும் முன் அவளே பேச ஆரம்பித்தாள்.

"விஸ்வாசமுள்ள ஓம்ராக்களே! நாட்டின் நெருக்கடி உணர்ந்து நான் கட்டளையிடு முன்னேயே நீங்களாக சபை கூட்டி எனக்கு அழைப்பும் விடுத்தமைக்கு நன்றி..."

அவள் வாக்கியத்தை முடிக்கவில்லை. "பீகம்! நிறுத்துங்கள், உங்கள் பிரசங்கத்தை! அரசியிடம் ஆணைபெற சபைகூடவில்லை; அரசிக்கு ஆணையிட சபை கூடியுள்ளது..."—பிரபல ஓம்ரா ஆயாத்கான் கர்ஜித்தான்.

ருசியா, ஆத்திரமடையவில்லை; அரசிக்கு சபையில் அவமானம் ஏற்பட்டுவிட்டதே என்று ஆதங்கமடையவில்லை. சாந்தமுடன் வசீகரப் புன்முறுவலையே, கவசமாக்கிக்கொண்டு பேச ஆரம்பித்தாள்.

"ஆயாத்கான்! ஏன் ஆத்திரமடைகிறீர்கள்? மக்கள் பிரதிநிதிகளின் ஆணைகேட்டு நடக்க வேண்டும் என்பதுதானே உங்கள் அரசியின் ஆசைகூட...... சொல்லுங்கள்; உங்கள் விருப்பத்தை...உடனே செய்து முடிக்கிறேன்......டெல்லிக்குக் கப்பம் கட்டி, டெல்லியின் பிரதிநிதியாய் ஆட்சி செய்யும் பிதுந்தா மாவட்ட குறுநில மன்னன் அல்தூனியா போர்க்கொடி உயர்த்தியிருக்கிருன், டெல்லி சுல்தானவை எதிர்த்து! அதற்கு உடந்தையாக ஆட்சிபீடத்தைக் கைப்பற்றும் தீய நோக்கத்துடன் பெய்ராமும் நாட்டுத் துரோகம், சகோதரத் துரோகம் செய்ய முனைந்து விட்டான்...உங்கள் பீகம் என்ன செய்ய வேண்டும்? நாட்டாசைப் பிடித்த காட்டுக் கும்பலிடம் சரணகதி யடைய வேண்டுமா? அல்லது டெல்லியின் மானம் காப்பாற்றப்பட போரில் இறங்க வேண்டுமா? என்ன செய்ய வேண்டும் ஆயாத்கான்......?"

"தன் பெயருக்கு ஏற்பட்டிருக்கும் களங்கத்தைப் போக்கிக் கொள்ள டெல்லி சுல்தான யாகூத்தை நாடுகடத்த வேண்டும்......"

ருசியா கடகடவென்று சிரித்தாள். ஓம்ராக்கள் அவளுடைய சிரிப்பின் பொருள் தெரியாமல் விழித்தார்கள்.

"விசித்திரமான மக்கள்... என்னிடத்தில் என்ன களங்கத்தைக் கண்டீர்கள்...? அடிமை யாகூத்திடம் அரசி சல்லாபித்துக் கிடக்கிருள் என்

✽ தொடர்ச்சி 12-ம் பக்கம்

## தி. மு. க. சட்டசபை-பாராளுமன்ற உறுப்பினர் தனிக் கூட்டம்

திராவிட முன்னேற்றக் கழகச் சார்பில் நின்று வெற்றி பெற்றுள்ள சட்டசபை—பாராளுமன்ற உறுப்பினர்களின் தனிக் கூட்டம் ஒன்று 31—3—57 ஞாயிறு காலை 10-மணிக்கு, சென்னை-இராயபுரம் 'அறிவக'த்தில், பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நடைபெறும். தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள உறுப்பினர்கள் அனைவரும் வருகைதர வேண்டுகிருேம்.

—தலைமைக் கழகம் (தி. மு. க.)



# மிகப் பெரிய கட்சியானோம்!

✽ 4-ம் பக்கத் தொடர்ச்சி

சொல்ல முடியாது; அவர்களது மனச்சாட்சியும் அதை ஒப்புக் கொள்ளாது; அந்த வெற்றி போலி வெற்றி! நான் குறிப்பிட்டதுபோல 63 லட்சம்பேர் காங்கிரசை வெறுக்கிருர்கள். 50 லட்சம் பேர் தான்—அதுவும் பணத்தாசை காரணமாக காளை மாட்டுப் பெட்டியில் ஓட்டுப் போட்டிருக்கிருர்கள். 'அவர்கள் எல்லாம் குளித்தலைத் தொகுதி வாக்காளர்கள் செய்ததுபோல செய்திருந்தால்—பணத்தையும் பெற்றுக் கொண்டு நல்ல பாடமும் கற்பித்திருந்தால் — அங்கெல்லாம் காங்கிரஸ் நிச்சயம் கவிழ்ந்தே போயிருக்கும்!

குளித்தலையிலே என்ன நடந்தது? எத்தனையோ இடங்களில் பணம் விளையாடியது; சிமெண்ட் மூட்டைகள் விளையாடின; 'நான் ஒரு ரூபாய் தருகிறேன்; எனக்கே ஓட்டுப் போடு' என்று வெற்றிலையோடு -தருகிற சீட்டோடு-கையிலே ரூபாய் நோட்டை வைத்து அழுத்தினர்கள். நானே

# மிகப் பெரிய செயல் புரிவோம்!

நேரில் பார்த்தேன்; பல இடங்களில் கேள்விப்பட்டேன்! நாங்கள் பட்டப்பகலில் சென்று பிரச்சாரம் செய்தோம்; இதுபோல மேடை அமைத்து பகிரங்கமாக ஓட்டு கேட்டோம்! ஆனல் எதிரிகள் பகிரங்கமாகவா ஓட்டு கேட்டார்கள்? நள்ளிரவிலே—கன்னக்கோலோடு புகும் கள்ளர்களைப்போல — யாராவது வருகிருர்களா என்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டு—கார் 'லைட்'டையும் அணைத்து விட்டு—யாரும் வரவில்லை என்பதை அறிந்தவுடன் ஊருக்குள்ளே புகுந்து-ஊரில் முக்கியமான யாரையாவது அழைத்து "இங்கே எத்தனை ஓட்டுகள் இருக்கிறது?" என்று கேட்க—200 என்று சொல்ல—"அப்படியே என்ன விலை?" என்று கேட்டு, ஊரையே விலைக்கு வாங்கினர்கள் இருநூறு, முன்னூறு என்று கொடுத்து! அந்தப் பணம் பங்கு போடப்பட்டது; அப்படி எங்கெங்கு போடப்பட்டது என்று எனக்குத் தெரியும்!

நான் முன்பே இங்கெல்லாம் பேசியிருக்கிறேன், உங்களுக்கு அப்படி அதிக கஷ்டமாக இருந்து, அந்த ஒரு ரூபாயோ, இரண்டு ரூபாயோ ஏதோ ஒரு நாள் உங்கள் உணவுக்குப் பயன்படும் என்று நீங்கள் கருதினல் பணத்தை வாங்கிக் கொள்ளுங்கள்; ஆனல் வலது கையால் வாங்காதீர்கள்—தலைமுறை தலைமுறைக்கும் மாருத 'அரசியல் பாவம்' அது—

ஆகவே, அந்தக் களங்கம் படிந்த பணத்தை இடது கையால் வாங்கி, வலது கையால் உதய சூரியன் பெட்டியில் ஓட்டுப் போடுங்கள்—என்று! அதைப்போலவேதான் அத்தனைப் பெரியவர்களும், ஏழை மக்களும் செய்திருக்கிருர்கள். இனி அடுத்த தேர்தலில் யாராவது முன்வர முடியுமா, 'பணத்தை வைத்துக் கொண்டு ஒருகை பார்த்துவிடுகிறேன்!' என்று! முடியாது; கொள்கையை எடுத்துக் காட்டித் தீரவேண்டும்; கருத்துக்களைப் பொதுமேடையிலே சொல்லியாகவேண்டும்; 'கருணநிதியின் கருத்துக்களுக்கும், திராவிட முன்னேற்றக் கழகத்தின் கருத்துக்களுக்கும், என்னுடைய கருத்துக்களுக்கும் இன்னின்ன வேறுபாடுகள் இருக்கின்றன! உங்களுக்கு எந்தக்கருத்து தேவை?" என்று கேட்டுத்தான் ஆக வேண்டுமே தவிர—மக்களை விலை பேசிவிடலாம்; ஓட்டுகள் சாதாரணமானவை; விலைகொடுத்து வாங்கிவிடலாம் என்ற நினைப்பில் இனிமேல் தேர்தல் நடைபெற முடியாது என்பதற்கான அறிவிப்புதான் இந்தப் பொதுத் தேர்தல்!

எத்தனையோ லட்சம் லட்சமாகப் பணத்தை செலவழித்தவர்கள் எல்லாம், தேர்தல் முடிந்த பிறகு கணக்கைப் பார்த்துவிட்டு, 'இனி இந்தத் தேர்தல் நமக்குத் தேவையேயில்லை' என்று கருதி — "காமராஜரே வந்தால்கூட 1,000 2,000 தந்து விடுகிறேன்; காங்கிரஸ் கட்சிக்கு 10,000 தந்து விடுகிறேன்; என்னை விட்டால் போதும்!" என்று சொல்லப் போகிற பணக்காரர்களை நாம் பார்க்கத்தான் போகிருேம்; இனி அவர்கள் காங்கிரசை நம்பி வரமாட்டார்கள்!

ஆனல், திராவிட முன்னேற்றக் கழகம் எதைக் குறிக்கோளாகக் கொண்டு இந்தத் தேர்தலில் ஈடுபட்டதோ, அந்தக் குறிக்கோளிலே கணிசமான வெற்றியைப் பெற்றிருக்கிறது.

நான் விளக்கிச் சொல்ல விரும்புகிறேன், திராவிட முன்னேற்றக் கழகம் போட்டியிட்ட 120 இடங்களிலும் காங்கிரசை சந்தித்தது. அதைப் போலவே 43 இடங்களில் கம்யூனிஸ்ட்டுகளையும், 26 இடங்களில் காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டியினரையும் சந்தித்தது. நீங்கள் நன்ருக ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும், அந்த 120 இடங்களில் காங்கிரஸ் பெற்ற ஓட்டுகள் 30,58,855 ஆகும்! திராவிட முன்னேற்றக் கழகம் பெற்ற ஓட்டுகள் 17,09,874 ஆகும்! எங்களை சந்தித்த 43 இடங்களிலும் கம்யூனிஸ்டுகள் பெற்ற வாக்குகள் 5,42,160—காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டி பெற்றது 3,45,703 ஓட்டுகள்! இந்தப் புள்ளி விவரங்களை வைத்து ஆராய்ந்தால்—நமக்கு ஒரு மிகப் பெரிய உண்மை புலப்படும். நாட்டிலே காங்கிரசுக்கு அடுத்த பெரிய கட்சி எதுவென்ருல், இதுவரை வாய்ச்சவடால் அடித்துவந்தார்களே கம்யூனிஸ்ட் கட்சிதான் என்று; அந்தக் கம்யூனிஸ்ட் கட்சியல்ல; சோஷலிஸ்ட் கட்சியோ; பிரஜா சோஷலிஸ்ட் கட்சியோ அல்ல; காங்கிரசு சீர்திருத்தக் கமிட்டியுமல்ல; திராவிட முன்னேற்றக் கழகம் தான் காங்கிரசுக்கு அடுத்த பெரிய கட்சி என்பது இந்தத் தேர்தலின் மூலம் நிச்சயமாக ஊர்ஜிதமாகி விட்டது!

நான் இதை எப்படி இவ்வளவு உறுதியாகச் சொல்லுகிறேன் என்ருல், கம்யூனிஸ்ட்டுகளைச் சந்தித்த 43 இடங்களில் திராவிட முன்னேற்றக் கழகம் பெற்ற ஓட்டுகள் 6,22,719 ஆகும்! அங்கெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சி பெற்ற ஓட்டுகள் 5,22,160 தான் ஆகும்! அது மாத்திரமல்ல; அந்த இடங்களில் திராவிட முன்னேற்றக் கழகம் பெற்ற வெற்றிகள் ஆறு! கம்யூனிஸ்ட் கட்சி பெற்ற வெற்றிகள் மூன்று தான்! இதிலிருந்து என்ன தெரிகிறது? காங்கிரசுக்கு அடுத்த பெரிய கட்சி தி. மு. கழகம் தான் என்பது நிரூபணமாகி விடவில்லையா?

120 இடங்களில் தி. மு. கழகம் பெற்ற ஓட்டுகள் ஏறத்தாழ 17 லட்சம் என்ருல்—இன்னும் மிகுதி யிருந்த எண்பது இடங்களிலும் நாம் அபேட்சகர்களை நிறுத்தியிருப் போமேயானல்— மொத்தமாக காங்கிரஸ் 50 லட்சம் ஓட்டுகள் பெற்றிருக்கிறது என்ருல், தி. மு. கழகம் நிச்சயம் 30 லட்சம் ஓட்டுகள் பெற்றிருக்க முடியும் என்றுதான் இந்தக் கணக்கு நமக்குக் காட்டுகிறது!

ஆகவே தி. மு கழகம்தான் இரண்டாவது பெரிய கட்சி என்பது உறுதியாகிவிட்டது. இதை நாம் மட்டும் சொல்லவில்லை; 'மவுண்ட்ரோட் மகாவிஷ்ணு' என்று நாம் வர்ணிப்போமே, அந்த 'ஹிந்து'ப் பத்திரிகை தலையங்கத்திலேயே குறித்துவிட்டது. 'கல்கி' ஏடு எழுதுகிறது; 'ஆனந்த விகட'னும் எழுதுகிறது; 'சுதேசமித்திர'னும் ஒப்புக்கொள்கிறது! பாராளுமன்றத்திலே செயலாளராக இருந்து அனுபவமிக்கவரான கிருஷ்ணய்யரே சொல்லுகிருர், 'வலுவான இரண்டாவது கட்சி தி. மு. கழகம்தான்' என்று.

காங்கிரஸ் ஏறத்தாழ 60 ஆண்டுகாலமாக இந்த நாட்டிலே வாழுகிறது. 60 ஆண்டு கால அனுபவம்மிக்க கட்சி—'சஷ்டியப்த பூர்த்தி' கொண்டாடிய கட்சி—பலப்பல ராஜதந்திரிகளையும், தேர்தல் தந்திரிகளையும் கொண்டிருக்கிற கட்சி —50 லட்சம் ஓட்டுகளைத்தான் பெறமுடிந்தது! ஆனல் 8 ஆண்டுகள்தான் தி. மு. கழகத்தின் சரித்திரம்! அப்படி எட்டாண்டு காலம் அரசியல் ரீதியில் வளர்ந்த கழகம்-அந்தக் குறுகிய கால அனுபவத்தில்—எடுத்த எடுப்பிலேயே—முதல் தேர்தலிலேயே 17 லட்சம் ஓட்டுகளைப் பெற்றுவிட்டது என்ருல், அடுத்த தேர்தலில் இந்நிலைமை எப்படியாக வளரும் என்பதைச் சற்று நினைத்துப் பார்க்கவேண்டுகிறேன்.

நாங்கள் எதிர்பார்த்தது 40 வெற்றிகளை! ஆனல் கணக்கு கொஞ்சம் தவறிவிட்டது; 15 இடங்களேதான் பெறமுடிந்தது. மற்ற 25 இடங்களில் தோற்ருேம் என்ருல் பெருமளவு ஓட்டுகள் பெற்றே தோற்றிருக்கிருேம். சேலம், லால்குடி, விழுப்புரம், ஆம்பூர்—போன்ற இடங்களின் முடிவுகள் அதை உணர்த்துகின்றன. துரோகி மந்திரி ராமசாமி (படையாச்சி) 42,000 ஓட்டுகள் பெற்ருர்! எதிர்த்து நின்ற மாணவர்; இன்னும் படித்துக்

# சட்டசபையில் குரல் கொடுப்போம்!

## தூங்கும் அமைச்சர்களைத் தட்டி எழுப்புவோம்!

கொண்டிருப்பவர்; திராவிட முன்னேற்றக் கழக இளைஞர் 40 000 ஓட்டுகள் பெற்றிருக்கிறார். மயிரிழையில் தப்பிவிட்டார் இந்த மந்திரியார்! இந்த முறையில் வெற்றிப் பாதையில் அடியெடுத்து வைத்து. ஒருபாசி சருக்கிவிட்ட காரணத்தால், அடியோடு கீழே விழுந்துவிடாமல், பக்கத்திலே கிடைத்த ஒரு கொடியையோ, கொம்பையோ பிடித்துக் கொண்டு தப்பிவிட்டதைப் போல அபிரிமிதமான எண்ணிக்கை ஓட்டுகள் பெற்றுத்தான் தோற்றிருக்கிறோம்!

காங்கிரசு வட்டாரத்திலே கூடப் பேசிக் கொள்ளுகிறார்களாம், "தி. மு. க. வை நாம் எடைபோட்டது பெருந்தவறு. அவர்கள் நல்ல எடை கொண்டவர்கள்தான்; வலுவுடைய கட்சிதான்!' என்று' வேண்டுமானால் திராவிடர் கழகத் தோழர்கள் மட்டும் பேசலாம்; இனியும் பேசலாம்; இன்னும் ஐந்து ஆண்டுகள்வரை பேசிக்கொண்டே இருக்கலாம். அவர்களுக்கு இதைத் தவிர வேறு வேலை கிடையாது! திராவிடர் கழகப் பெருந் தலைவர்களில் ஒருவர்கூட குறிப்பிட்டாராம், —"இந்தத் திராவிட முன்னேற்றக் கழகப் பயல்கள் ஒருக்காலும் 15 இடம்கூடப் பெற முடியாது; அப்படி வந்து விட்டால் என் பாரியாளையும் மகளையும் நடுத்தெருவிலே 'எப்படியோ' நிறுத்தி வைக்கிறேன்" என்பதாக! இப்படி மிக மிகக் கேவலமான முறையில்—கீழ்த்தரமான வகையில் — தி. மு. க. வின் கொள்கைகளையும், அதன் பாசமுற அமைப்பையும் புரிந்து கொள்ளாது பேசப்பட்ட சொற்கள் தேர்தல் காலத்தில் இந்த நாட்டில் ஏராளம்!

எனக்கு முன்னால் பேசிய தோழர் சிவராஜ் குறிப்பிட்டார், எனது வெற்றி பெரியாரின் வெற்றி என்று. உண்மைதான்; தெரிந்தோ தெரியாமலோ இது பெரியாருக்கான வெற்றிதான்! ஏனெனில் நம்மை ஆளாக்கி விட்டவரும் பெரியார்தான்! இன்று அழிக்கப் புறப்பட்டிருப்பவரும் பெரியார்தான்!

கருணாநிதியா—அவன் நான்கு அடி உயரந்தானே இருக்கிறான், சின்னப் பையனைப் போல; நமது வீட்டுக் குழந்தையைப் போல. அத்தகையச் சிறுவனை எதிர்க்க எழுபது வயதுப் பெரியார்—தாத்தா—தள்ளாத வயதிலே படாதபாடு படுகிறாரே, ஏன்?—குளித்தலைத் தொகுதி மக்களின் உள்ளத்திலே எல்லாம் இந்தக் கேள்வி தைத்தது. இந்தச் சாதாரணமானவனை எதிர்க்க காமராசர் சுற்றுப் பயணம் நடத்துகிறாரே, ஏன்? பக்தவத்சலம் பவனி வருகிறாரே. ஏன்? காங்கிரசின் பிரச்சார பீரங்கிகள் முழங்குகின்றனவே, ஏன்? திராவிடர் கழகத்தின் படையே புறப்பட்டு வந்திருக்கிறதே, ஏன்? 'சேலத்தைவிட்டு விடாதே! காஞ்சியை விட்டு விடாதே! குளித்தலையை விட்டு விடாதே!' என்று தினம் தினம் தலையங்கம் எழுதப்படுகிறதே. ஏன்?—என்ற கேள்விகள் கிளம்பத்தான் செய்தன. 'ஓகோ! இந்தக் கருணாநிதியிடத்திலும் ஏதோ சரக்கு இருக்கத்தான் வேண்டும்! அதனால்தான் பெரியார் இவனையும் ஒழிக்க முற்பட்டிருக்கிறார்' என்று கருதினீர்கள்; அந்தச் சரக்கிற்கு மதிப்பளிக்க விரும்பினீர்கள்; மதிப்பையும் அளித்தீர்கள்; அந்த மதிப்புதான் இங்கு குவிந்திருக்கும் இம் மாலைகளும் நான் பெற்ற வெற்றியும்!

இந்த வெற்றியை நான் உதாசீனம் செய்ய மாட்டேன்; துர்விநியோகம் செய்து விட மாட்டேன்!

இன்றைய தினம் இந்த லாலாப்பேட்டையிலே நீங்கள் நடத்தினீர்களே மா பெரும் ஊர்வலம்—பவனி—இதை என்றென்றும் நான் மறக்க முடியாது. என் உள்ளத்தில் எங்காவது ஒரு மூலையில் இடம் பெற்று என் பொறுப்பை—கடமையை எனக்கு நினைவுபடுத்திக் கொண்டேயிருக்கும்! இன்று நடைபெற்ற ஊர்வலம் ஒரு மாப்பிள்ளை ஊர்வலம்போல் இருந்தது. என்னை அழகாக அலங்கரிக்கப்பட்ட காரில் அமர்த்தி மாப்பிள்ளையைப்போல அழைத்து வந்தீர்கள்; மாப்பிள்ளை என்பதால் ஒரு பெண்ணையும் திருமணம் செய்து வைத்திருக்கிறீர்கள். அந்தப் பெண்தான் வெற்றிச் செல்வி! அந்த வெற்றிச் செல்வியை எனக்குத் தந்திருக்கிறீர்கள்; நான் வெற்றியைப் பெற்றிருக்கிறேன்; நான் அதற்குத் 'தாலி' கட்டியிருக்கிறேன்; எங்கள் இருவரையும் 'மரு வீடு' அழைத்து விருந்து நடத்தி ஊர்வலம் விட்டிருக்கிறீர்கள். ஆகவே திருமணம் செய்து கொண்ட நான் உங்களுக்கு உறுதி தர வேண்டாமா? 'நான் வெற்றியை ஒழுங்காக வைத்துக் குடும்பம் நடத்துவேன்! ஒழுங்காகக் காப்பாற்றுவேன்! ஆகவே, சம்மந்தி வீட்டாரே! கவலைப்படாதீர்கள்! கவலைப்படாதீர்கள்!' என்று உறுதி தருகிறேன்!

வருகிற தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று—ஏப்ரல் பதினான்காம் நாளன்று சென்னை சட்டமன்றத்திலே அண்ணாவும், பக்கத்திலே நானும், அன்பழகனும், ஆசைத்தம்பியும், இன்னும் மற்றவர்களும், காமராசருக்கு நேராக—மந்திரிகளுக்கு நேராக—தூங்குமூஞ்சி எம். எல். ஏ.க்களுக்கு எதிராக உட்காரப்போகிறோம்! இனிமேல் தூங்குவார்களா. அவர்கள்? தூங்கத்தான் விடுவோமா? எங்களுடைய குரல் அங்கு ஒலித்துக் கொண்டே இருக்காதா!

தாய்மார்களை நான் எப்படித்தான் பாராட்டுவது என்றே புரியவில்லை. தொகுதிக் கூட்டங்களிலே நான் பேசும்போது சொன்னேன், உங்கள் வீட்டாரும் தெருவாரும் எப்போதும் நினைவிலிறுத்திக் கொள்ள வீட்டு வாசல்களில் 'உதய சூரியன்' கோலத்தைப் போடுங்கள்—அந்தக் கோலம் போட புள்ளி வைக்கவேண்டிய அவசியங்கூட இல்லை; ஒரு வளைவான கோடு; மேலே ஐந்தாறு நேர்க்கோடுகள்; இவ்வளவுதான்; கோலம் முடிந்துவிடும்; கொள்கையும் நிறைவேறிடும்—என்று! மறு தினத்திலிருந்தே உதய சூரியன் கோலம் இல்லாத வீடுகளை நான் காணவே இல்லை. அதுபோல பலப்பல இடங்களிலே கோலமிட்டார்கள் தாய்மார்கள்; கொள்கைக்கு உறுதுணையாக வெற்றியும் தேடித் தந்தார்கள். உதாரணமாக, தண்ணீர்ப்பள்ளி என்ற இடத்திலே பெண்கள் ஓட்டுச்சாவடியில் வைக்கப்பட்டிருந்த ஓட்டுப் பெட்டிகள் எண்ணிக்கைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டபோது ஒரு விசித்திரத்தைக் கண்டோம். அந்த இடத்திலிருந்த மாட்டுப் பெட்டியை எடுத்து, ஓட்டுக்களை எண்ண கவிழ்த்தபோது, அதிலே ஒரு ஓட்டுகூட இல்லை—காங்கிரசு பெட்டியில் ஒரு ஓட்டுகூட இல்லாதிருந்த இந்தியாவிலேயே ஒரே பெட்டி அந்தத் தண்ணீர்ப்பள்ளி பெட்டிதான்! அத்தகைய பெருமை வாய்ந்த இந்தத் தொகுதியைக் குளித்தலைத் தொகுதி என்று நான் சொல்ல மாட்டேன். இது என்னுடைய தொகுதி—என்னுடைய சொந்தத் தொகுதி! ஆமாம்; சொந்தத்தோடு; உரிமையோடு; பாசத்தோடு; பற்றோடு சொல்லுகிறேன், இது கருணாநிதியின் தொகுதி! இங்கேதான் இப்போதும் வென்றேன்; அடுத்த முறையும் வெற்றி பெறுவேன்; எப்போதும் வெற்றி பெறுவேன் உங்கள் ஆதரவோடு! ஃ







பிறைவானம்

# தோட்டி முதல் தொண்டைமான் வரை...

"தோட்டி முதல் தொண்டைமான்வரை — ஆண்டி முதல் அரசன்வரை—எந்தப் பாகுபாடுமின்றி—'எல்லோரும் ஓர் இனம்; எல்லோரும் ஒரே குலம்!' என்ற அடிப்படைத் தத்துவம்தான் இந்திய அரசியல் சட்டத்தின் ஆணிவேர்..."

குடிசைக்குள்ளிருந்து 'கொல்' கொல்' என்ற இருமல் சப்தம் எழும்பியது.

ஊர்க் கோடியிலிருந்த அந்தச் சேரியில்...சேரி என்று எழுதுகிறேனே; அது தவறாயிற்றே! அந்தப் பெயர் கொஞ்சம் விகாரமாக இருப்பதாலோ என்னவோ; 'காலனி' என்று அழகாகச் சொல்ல வேண்டுமென்பது சர்க்கார் வேண்டுகோளாமே—எப்படி அழைத்தால் என்ன? காட்டு மிராண்டிகள்கூட வசிக்க விரும்பாத சாக்கடை பூமிதான் அது; அங்கே வசிப்பவர்களும் நமது நாட்டு 'மவராசர்கள்' தானே!

குடிசை வாசலில் புத்தகத்தைப் பிரித்து வைத்துக் கொண்டிருந்த சங்கனுக்கும் அந்த வாசகங்களின் பொருள் பிடிபடவே இல்லை. திருப்பித் திருப்பிப் படித்தான். இந்திய அரசியல் சட்டத்தின் புரியாத அந்த 'ஆணிவேர்' அவன் நெஞ்சில் பதிய மறுத்தது. தோட்டியும் தொண்டைமானும் ஒன்றுமே! அது எப்படி?...ஓகோ! ...ஊஹூம்....சே!... சே!....என்ன குழப்பம் இது?......அவனோ தோட்டி மருதனின் செல்வக் கொழுந்து! அவனும், அரச போகம் அனுபவிப்போரும் ஒன்றுதான்—என்று பாடப் புத்தகத்திலேயே அரசியல் சட்டத்தின் பெருமையைப் பற்றி எழுதினால்... அவன் சிறுவன்தானே! அந்த அபாண்டமான —அக்கிரமமான— மலை போன்ற பொய்யை அவன் எப்படி நம்புவான்?

உள்ளேயிருந்து இருமல் சப்தம் மேலும் எழும்பியது...

சங்கன் எந்த விதப் பதட்டமும் அடையவில்லை. உடலைக் குலுக்கி எழும்பும் அந்த இருமல் மற்றையோரின் நெஞ்சைக் குலுக்கும் அளவுக்கு பயங்கரமானதுதான்! என்றாலும் பழகிப் போய்விட்டான் சங்கன்; ஏன் பயப்படப் போகிறான்?

அன்றைக்கு பள்ளிக்கூடத்தில் அந்தப் பாடத்தில் கேள்வி கேட்பார் ஆசிரியர். தவறினால் போதும்; கடும் தண்டனைதான் கிடைக்கும். பிரம்படி மட்டுமல்ல; "தோட்டிக் கழுதைக்கு படிப்பு ஒரு கேடா!" என்பன போன்ற சொல்லடிகளும் விழுமே!

கொடூரமான இருமலோடு 'சங்கா, சங்கா!' என்ற குரலும் உள்ளிருந்து எழும்பியது.

சங்கன் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு உள்ளே ஓடினான்.

குடிசைக்குள் முடங்கிக் கிடந்த எலும்பும் தோலுமான உடல் ஒன்று, தன் குழிவிழுந்த கண்களை மெதுவாகத் திறந்தது.

"சங்கா!..."

"என்ன நாயினா?..."

"மேஸ்திரியைப் பார்த்தியாடா? ஏதாச்சும் துட்டு கொடுத்தாரா? பசி என்னைக் கொன்னுடும்போலிருக்கேடா!"

"மேஸ்திரியைப் பாத்தேன் நாயினா! ஆனா துட்டு கொடுக்கல்லே! ஒங்கப்பன் 'டியூட்டி'க்கு வரானா இல்லையா? அவன் 'வார்டு'க்கு எத்தனை நாளைக்கு வேறே ஆளு போடறது? நாளைக்கு வரலேன்னா அவன் சீட்டுக் கிழிஞ்சு போயிடும்! முனிசிபாலிட்டி என்னா அவன் பாட்டன் வீடா?—அப்படி இப்படின்னு கண்டபடி திட்டினாரு நாயினா!"

மருதன் மௌனமாகிவிட்டான். எப்போதாவது அளவுக்குமீறி பசி எடுத்தால் அவன் இப்படித்தான் சுருண்டு படுத்துவிடுவான். ஆனால், இப்போது பசி மட்டுமல்ல; மகன் தந்த மனதைக் குழப்பும் செய்தி அவனை வாட்டி வதைத்தது.

மேஸ்திரிக்கோ, மேஸ்திரியை அதட்டும் முனிசிபாலிட்டி யாருக்கோ மருதனைப்பற்றி என்ன கவலை? பொழுது விடிவதற்கு முன்பே தன் 'டியூட்டி'க்குக் கிளம்பி விடுபவன் அவன். ஒரு கையில் பழைய வாளி — மறு கையில் குறுகிப்போன 'துடைப்பம்' ஒன்று—இவற்றுடன் அவன் தன் 'வார்டைச்' சுற்றி முடிப்பதற்கு பத்து மணி யாகிவிடும். நான்கு மணி நேர வேலைதான்; இருந்தாலும் அவன் வேலையில் தாமதப்பட்டாலோ, அல்லது 'லீவ்' எடுத்துவிட்டாலோ வீட்டார் பொறுப்பார்களா? முனிசிபாலிட்டிக்கு வரி கட்டும் பெருமையை அப்போதுதானே சொல்லிக் காட்டுவார்கள்?

மருதனுக்கு அடிக்கடி வரும் இருமல் இம்முறை சற்று கடுமையாகவே தாக்கி படுக்கையிலும் கிடத்திவிட்டதே! அவன் என்ன செய்வான்?

"பசி என்னைக் கொன்னுடும் போலருக்கேடா....!"—என்ற 'நாயினா'வின் முணுமுணுப்பு சங்கனின் காதுகளில் காய்ச்சிய ஈயத்தை ஊற்றியது போல வேதனையைத் தந்தது.

அப்போது முனிசிபாலிட்டி பள்ளிக்கூடத்துப் பெரிய மணி "டாண், டாண்" என்று ஒலித்தது. அது முதல் மணி—பள்ளிக்கூடம் ஆரம்பமாக இன்னும் ஐந்து நிமிடங்கள்தான் இருக்கின்றன என்று அறிவிக்கும் எச்சரிக்கை ஒலி' பள்ளி வாசலில் கடலையைக் கொரித்துக்கொண்டும், கூட்டம் கூட்டமாக வம்பு பேசிக்கொண்டும் இருக்கும் சிறுவர்களுக்கு ஒரு 'அபாய அறிவிப்பு'!

"நாயினா! 'பஸ்ட் பெல்' அடிக்குது நாயினா! நான் பள்ளிக்கூடத்துக்குப் போகட்டுமா?"—சங்கன், ஏதோ மறந்திருந்த ஒன்றை திடீரென்று நினைவு படுத்திக் கொண்டவனைப்போலத் துடித்தான்!

மருதன் மௌனமாகவே இருந்தான். "என்ன நாயினா?..."—மீண்டும் மெதுவாக வாயைத்திறந்தான் சங்கன்.

"எங்கேயாவது போய்த்தொலை! என் பிராணனை ஏன் வாங்குறே!"

-மருதனுக்கு எங்கிருந்துதான் தெம்பு வந்ததோ தெரியவில்லை—குரல் சற்று உரக்கவே எழுந்தது. அதைத் தொடர்ந்து சங்கனின் விக்கல் ஒலியும் எழுந்தது.

"நான் பாடையிலே போறவரைக்கும் நீ படிச்சுக்கிட்டே இரு!" என்ற சலிப்புக் குரலோடு இருமல் தொடர்ந்தது.

சங்கன் பள்ளி நோக்கி நடந்தான். தந்தை புலம்புகிறார்; மகனுக்கு படிப்பு ஒரு கேடா?—என எண்ணத் தோன்றுகிறதல்லவா? படிக்க வேண்டுமென்று சங்கனை விரும்பினான்? மருதன், தான் செய்யும் தொழில் மானக்கேடானது என்று கருதினான். தன் மகனும் அந்தத் தொழிலை செய்யத்தான் வேண்டுமா? 'கக்கூஸ்' சுத்தம் செய்யத்தான் வேண்டுமா? அவனது பரம்பரையே இந்தப் பாழும் தொழில் செய்து பரிதாபத்துடனேயேதான் வாழ வேண்டுமா? இப்படி எல்லாம் எண்ணி எண்ணி விம்மினான்.

"ஏண்டா சங்கா! நீ பள்ளிக்கூடம் போறியா......படிக்கிறதுக்கு...?"

"என்ன நாயினா, பள்ளிக்கூடத்துக்கா? நம்ப மேஸ்திரி ஐயா மவன் போறானே அங்கேயா? சரி நாயினா: சரி நாயினா! இப்பவே போறேன்!..."

—என்று எல்லையற்ற மகிழ்ச்சியால் சங்கன் துள்ளிக் குதித்த பிறகுதான் அவனை முனிசிபாலிட்டி பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி வைத்தான் மருதன். மகன் படித்து வக்கீலாக வேண்டும்; டாக்டராக வேண்டும் என்பதெல்லாம் அவன் ஆசையில்லை. தன் மகனை எப்படியாவது முனிசிபாலிட்டி மேஸ்திரியாகவாவது ஆக்கிவிட வேண்டும்: அதுவே அவனுக்குப் போதும். தன்னைப்போன்ற ஏழைக் கூலிகளை அதட்டி வேலை வாங்கும் மேஸ்திரி உத்தியோகம்தான் மிக்க அதிகாரம் கொண்டது என்பது அவனது எண்ணம். ஆனால் அவனது அந்த ஆசைக்கு முதல் எதிரியாக வந்து குதித்தார் பள்ளிக்கூட ஆசிரியர் கோபாலய்யர்! பணக்காரப் பிள்ளைகளுக்கு பாடம் போதிக்கும் தன் வாயால் தோட்டிபெற்ற செல்வன் சங்கனுக்குமா போதிப்பது? என்ன கருமம், கன்றாவி!—இப்படி தலையில் அடித்துக் கொண்டார். சட்டம் என்று வேறு ஒன்றுஇருக்கிறதே: அவர் என்ன செய்ய முடியும்? சங்கனுக்கும் கல்வி தந்தார்: ஆனால் 'மாற்றாந்தாயாக' இருந்தார்.

சங்கன் பள்ளிக்கூடத்தை அடைந்தான் பலிபீடம் செல்லும் ஆடு போல. அதற்குள் இரண்டாவது மணியும் அடித்து பள்ளிக்கூடமும் துவங்கி விட்டிருந்தது. கேட்க வேண்டுமா கோபாலய்யருக்கு?

"ஜென்மத்தோட பொறந்தது செருப்பாலே அடிச்சாலும் போகுமோ? ஏண்டா, ஒங்கப்பன் 'தெவச'த்துக்குப் போயிருந்தியோ? ராஜாவாட்டமா ஆடிண்டு வரயே..." என்று இரைந்தார். 'பிளாக் போர்டு'க்குப் பின்னால் மறைத்து வைத்திருந்த மணிப் பிரம்பை எடுத்தார். 'சுளீர்; சுளீர்' என்று அடித்தார்.

சங்கன் "ஐயோ!" என்று அலறினான். துடித்தான். கீழே துவண்டு விழுந்தான்.

கோபாலய்யர் 'எவரஸ்ட்' சிகரத்தை எட்டிப் பிடித்துவிட்ட 'டென்சிங்'கின் நிலையிலே இருந்து பூரித்தார்.

"உன் அப்பனுக்கு தெவச மாடா!"—என்ற அவரது கடுசொல் சங்கனை என்னவோ செய்தது.

"நான் பாடையிலே போறவரைக்கும் நீ படிச்சுக்கிட்டே இரு!"—தந்தையின் அந்தத் தீனக்குரல் இப்போதுதான் சங்கனின் நெஞ்சிலே கோரமாகத் தைத்தது.

"பசி என்னைக் கொன்னுடும் போல இருக்கேடா..."

—சங்கரன் தன் வீடு நோக்கித் தலை தெறிக்க ஓடினான்.

அங்கே...அவன் கண்ட காட்சி! ...கோபாவேசமாக நின்று கொண்டிருந்த 'மேஸ்திரி ஐயா'வின் அதிகாரம் மிக்க பாதங்களைத் தன் இரு கைகளாலும் இறுகப் பிடித்துக் கதறிக் கொண்டிருந்தான் மருதன்!

"சீ, விடுடா காலை! நான் என்ன செய்வதாம்? கமிஷனரய்யா உத்தரவு! நாளைக்கு நீ வார்டுக்கு வரலேன்னா உன் சீட்டு கிழிஞ்சது கிழிஞ்சதுதான்! அப்புறம் ஒட்டவே ஒட்டாது!" என்று உறுமினார் மேஸ்திரி!

"ஐயா! நான் என்னய்யா செய்யறது?..."

"என்ன செய்யறதா? ஒனக்கு பதிலா உன் மவனை அனுப்பு! என்ன அவன் படிச்சுக் கிழிக்கிறது வீணாப் போவுது?..."

மேஸ்திரி காலைப் பிடித்துக் கிடந்த அந்த எலும்புக் கூட்டை உதறித் தள்ளிவிட்டுப் போய் விட்டார்.

சங்கன் ஓடிப்போய் தன் அப்பாவைத் தாங்கிக் கொண்டான். மேஸ்திரியின் கால்களுக்கு இல்லாத இரக்கம் அவன் கைகளுக்கு அப்போது இருந்தது: இரக்கம் மட்டுமல்ல; இனம் தெரியாத வலுவும் இருந்தது. இருக்காதா? பிஞ்சுக் கைகள்தான்; ஆனாலும் இரண்டு பேர் கொண்ட அக்குடும்பத்தைக் காக்கும் பெரும் பாரம் அந்தக் கைகளில்தானே விழுந்திருக்கிறது அப்போது!

★

மறுநாள் காலை...

இரு வாரமாக முனிசிபாலிட்டிக் கிடங்கில் கிடந்த மருதனின் வாளியையும் 'துடைப்பத்'தையும் எடுத்துக்கொண்டு தன் வீட்டுக் கொல்லைப்புறம் நுழைந்த சங்கனைக் கண்டதும் கோபாலய்யரின் உச்சி குளிர்ந்தது!

"தோட்டி முதல் தொண்டைமான் வரை — ஆண்டி முதல் அரசன் வரை..."

—பக்கத்து வீட்டு மேஸ்திரி ஐயாவின் மகன் கொல்லைப் புறத்தில் இப்படி படித்தபடி உலவிக் கொண்டே இந்திய அரசியல் சட்டத்தின் அடிப்படைத் தத்துவத்தை உருப் போட்டுக் கொண்டிருந்தான்!

சங்கனுக்கு அதன் உட்பொருள் இன்னும் புரியவில்லை: பாவம்! பரிதாபம்!

—சொர்ணம்




## வடநாட்டவர் உதவி?

'உண்மை விரும்பி; இராமநாதபுரம்

**(?)** தமிழ்நாட்டு கம்யூனிஸ்ட்டு கட்சியினர் வடநாட்டு முதலாளிகளிடமிருந்து பொருளுதவி பெற்று திராவிட முன்னேற்றக் கழகத்தின் சக்தியைச் சிதைப்பதற்காக இந்தத் தேர்தலில் முயன்றனர் என்று சிலர் கூறுகிறார்களே; அது பற்றி உமது கருத்து என்ன?

இனிமேல் வடநாட்டு முதலாளிகள் அப்படிச் செய்ய முன் வந்தாலும்; அந்த முதலாளிகளின் உதவியை தமிழ்நாட்டுக் கம்யூனிஸ்ட்டுக் கட்சி நாடிப் பெற்றாலும் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை, நண்பரே!

வி. கமலக்கண்ணன்; சிதம்பரம்.

**(?)** நடைபெற்ற பொதுத் தேர்தல் மூலம் லாபம் பெற்ற தந்தையர் கழகத்தவர்கள் வரப் போகிற ஐந்து ஆண்டுகளுக்கு என்ன செய்வார்கள்?

உபதேர்தல் ஏதும் வராதா என்று ஏங்கிக் கொண்டிருப்பார்கள்!

எஸ். பி. சோமசுந்தரம்; குடந்தை.

**(?)** பேங்கனையின்றிக் காங்கிரசை ஆதரித்ததால் தி. க. வுக்கு ஏற்பட்ட பலன் என்ன?

பெரியாருக்குப் பிறகு நடக்க இருந்தது இப்போதே நடக்க ஆரம்பித்து விட்டது — கட்சியின் தேய்வைத்தான் குறிப்பிடுகிறேன்!

எம். அய்யாதுரை; எழும்பூர்.

**(?)** தேர்தலுக்குப் பிறகு உங்கள் கட்சி கலகலத்து விடுமா?

அத்தகைய தனிச் சிறப்புக்கு உரியது கம்யூனிஸ்ட்டுக் கட்சி ஒன்றுதான், தோழரே!

சா. கேசவன்; உறையூர்.

**(?)** தி. க. என்பது என்ன?

அது ஒரு 'ஒஹபெருக்கிக் கம்பெனி! யார் அதிக வாடகை தர முன் வருகிறார்களோ அவர்களுக்கெல்லாம் அது பிரச்சாரக் கருவியாகப் பயன்தரும்!

**(?)** ஒருவர் பெரியாரின் ஆதரவைப் பெற நினைத்தால் என்ன செய்ய வேண்டும்?

குருசாமியின் உறவினராகப் போயுக்கி எடுத்து அவர்களுக்கெல்லாம் உயர்ந்த உத்தியோகம் வாங்கிக் கொடுக்க வேண்டும்!

## அபிசீனிய அடிமை..

❊ 8-ம் பக்கத் தொடர்ச்சி

பதுதானே உங்கள் எண்ணம்? இராஜ தந்திரத்திற்கும் விரச உணர்ச்சிகளுக்கும் வேறுபாடு தெரியாத பைத்தியக்காரர்களே! அரசி யாகூத்திடம் அடைக்கலம் அடைந்துவிடவில்லை; யாகூத்தான் அந்தப்புரத்துப் பணிப்பெண் ஒருத்தியிடம் காதல் கொண்டிருப்பதாக அபிநயித்து, அவளைப் பயன்படுத்தி பீகத்தின் ஆட்சிக்குப் பலஹீனம் உண்டாக்க, அல்துனியாவைத் தூண்டிவிட்டு ஆட்சிசையே கவிழ்த்து, பெய்ராமுக்கு முடிசூட்ட முடிவும் செய்துவிட்டான்...சதியைத் தக்க சமயத்தில் கண்டு பிடித்து, எந்த நிலையையும் சமாளிக்கப் போர்க்கோலம் பூண்டிருக்கும் ருசியா-உங்கள் சகோதரி-களங்க முடையவள். அப்படித்தானே, ஆயாத்கான்? டெல்லி மக்கள் நலனுக்காக நான் செய்த் தவறியது என்ன? சம்பிரதாயங்களை ஏன் மீறினேன்? ஆளத்தெரியாத சகோதரர்களால் ஆட்சி உழலாமல் தடுக்க, பெண் என்பதையும் மறந்து ஆணையே ஆட்சிபுரிந்தேன். சடங்குகளை ஏன் உடைத்தெறிந்தேன்? சடங்குகளின் பேரால் சரச விளையாட்டுக்கள் மலிந்துவிட்டால், சாம்ராஜ்யம் சரிந்துவிடும்; அரசியல் பலம் போய் விட்டால் இஸ்லாம் மதம் அழிந்து விடும் என்ற அச்சம்; பெண்மைக்கு மதம் இட்ட வேலியையும் தாண்டிஎன்னைச் செயலில் ஈடுபடத் தூண்டியது. இவையெல்லாம் குற்றம் என்றால் நீங்கள் அளிக்கும் தண்டனையை பீகம் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறாள்...."—உணர்ச்சியூட்டும் வகையில் சாதுரியமாகப் பேசி விட்டுத் தீர்ப்புக்காகக் காத்து நின்றாள்.

ஓம்ராக்கள் சிந்தனை முகங்களில் நிழலாட பதிலே பேசாமல் வீற்றிருந்தனர். சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொண்டாள் ருசியா.

"நன்றியுள்ள ஓம்ராக்களே! நாட்டின் பகைவர்கள், காட்டிக் கொடுக்கும் முறையில் கலக முரசு கொட்டிவிட்டார்கள். இதோ சான்று (யாகூத், பமீயாவிற்கு எழுதிய கடிதத்தை வாசித்துக் காட்டுகிறாள்). நீங்கள் செய்யவேண்டிய முடிவெல்லாம் இதுதான். அபிசீனிய மண்ணிலிருந்து கொண்டுவரப்பட்ட அடிமை, டெல்லியை அவமதிக்க, அதன் ஆட்சியைக் கவிழ்க்க அனுமதிப்பதா? அல்லது, பொம்மைகளை ஆட்சிப்பீடமேற்றி புவியாளத் திட்டமிடும் வேற்று நாட்டவரின் திட்டத்தை முறியடிப்பதா? டெல்லி ஆட்சியின் தலைவிதியை நாம் நிர்ணயிக்க வேண்டிய நேரமிது...காலந்தாழ்த்தினால் கடமை தவறியவர்களாவோம்...... பேசுங்கள் ஓம்ராக்களே! ஏன் பேசாமலிருக்கிறாய் ஆயாத்கான்...?"

பீகம் இந்தக் கேள்வியை எழுப்பிய நேரத்தில், விசாரணை மண்டபத்தினுள் ஒரு வேலையாள் விரைந்துவந்து தலைவணங்கினான்.

"பீகம், கலகக்காரர்கள் ஆக்ரா நகரருகில் போருக்குத் தயாராக அணிவகுத்து விட்டார்கள்," என்றான்.

"இன்னும் என்ன தான் யோசனை?" என்றாள் அரசி.

"பீகம் ருசியா வாழ்க! சுல்தானா ருசியா வாழ்க!" என்ற கோஷங்கள் வானைப் பிளந்தன.

குற்றவாளியாக மண்டபத்தினுள் நுழைந்த ருசியா, ஓம்ராக்களின் ஒருமித்த ஆதரவு பெற்ற போர்த்தலைவியாக வெளியேறினாள்.

(தொடரும்)



ஆசிரியரும், அச்சிடுபவரும், வெளியிடுபவரும் மு. கருணாநிதி, 'முரசொலி' அச்சகம், 4-128, மவுண்ட்ரோடு, சென்னை-6. தமிழ்நாடு

